# ஞானபோதினி.

## ஒரு மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை.

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந்தார்—திருக்குறள்.

ஸம்புடம். III.

1899 - ஆகஸ்டு முதல் 1900 - ஆகஸ்டு வரை.

பத்திராதிபர்:—பூர்ணலிங்கம் பிள்ளை, பி. ஏ.

சென்னை:
தாம்ஸன் கம்பெனியாரால்
பதிப்பிக்கப்பட்டது.

1900.

# பொருளடக்கம்.



---

விஷயதானஞ் செய்தவர்கள்.



14. குப்புசாமி முதலியார், (கல்துளம்), பி. ஏ.—காங்கிரஸ் மகாசபை; பாரத ஸாரம்; பொருண்முறை நூல்.

15. கோபாலாசாரியர், (கா)—பர்த்ருஹரி.

16 சாமிநாதப்பிள்ளை,—நூல்விழைவு.

17. சிவகாமி—பெண்கல்விக் கும்மி.

18. சிவஞான யோகிகள். (விருதை)—ஆசாரவிளக்கம்; சாந்திவிலாசம்.

19. சுந்தரராஜ ஐயர், (என். வி.) பி. ஏ., எல்.டி.—பெண்கல்வி விவாதம்.

20. சுப்பிரமணியாசாரி (சி) பி. ஏ., எல். டி.—பிரகிருதி சாஸ்திரம்.

21. சூரியநாராயண சாஸ்திரியார், (வி. கோ.) பி. ஏ.—கடற்கரையுலா; தாமரைத்தடம்; மதிவாணன் கதை; முத்திராராட்சசம்.

22. சேஷகிரி சாஸ்திரியார், (தி. மி.) எம். ஏ.—தமிழ்க்கவி சரிதம்.

23. சொக்கலிங்கம்பிள்ளை, (சி. எஸ்.)—கசாபியான்கா; கடவுளுண்மை.

24. பரிதிமாற் கலைஞன்—தனிப்பாசுரத்தொகை.

25. பலராமையர், (ந)—லீலை.

26. பிரணதார்த்திஹர சிவன், பி. ஏ.—உமையவள் பதிகம்; சிலப்பதிகார வாராய்ச்சி; புருஷவசீகரம்; மல்லிகைமாதவர்.

27. பூர்ணலிங்கம் பிள்ளை, பி. ஏ.—இராஜவிசுவாசம்.

28. வரதாசாரியன், (சருக்கை)—வாழ்க்கைப்பயன்.

29. வேதாசலம்பிள்ளை, (நாகபட்டினம்)—நக்கீரனார் தெய்வப்புலமை மாட்சி.

30. ஸ்ரீநிவாச ஐயங்கார், (கு. ரா.) பி. ஏ.—ருக்குமணி சரித்திரம்.

31. ஸ்ரீநிவாசாசாரியர்,—மைசூரரசு.

32. ஸ்வாமிநாத ஐயர், (தி. அ.)—காதம்பரிச் சுருக்கம்; நாடகவிலக்கணச் சுருக்கம்; பகவத்கீதை; விவேக சந்திரிகை; ஹிரண்மயி சரித்திரம்.

——

# ஞானபோதினி.

ஸம்புடம் III. } 1899ஞ ஆகஸ்டுமீ 20உ. { புத்தகம் 1.

## விஞ்ஞாபனம்.

சேந்தமிழ் போற்றுஞ் சேல்வர்காள்!

நுந்தம் ஆசீர்வாதத்தால் இப்பொழுது ஞானபோதினிக்கு மூன்றாவது பிராயம் ஆரம்பமாகின்றது. சென்ற இரண்டு வருடங்களில் நீவிர் நுமது எழுத்தினாலும் வாக்கினாலும் பொருளுதவி செய்தும் ஞானபோதினியைப் பாதுகாத்து வந்தது போன்று இனியும் அது மேன்மேலும் விருத்தியாகும்படி பலவாறு உதவி புரிவீர்களென்று உண்மையாய் நம்புகின்றனெம்.

இப்பத்திரிகையை முதல் முதலில் ஆரம்பஞ் செய்தபொழுது இதற்குக்கையொப்பக்காரர்கள் எவரேனு மிருந்திலர். ஆயினும் கைப்பணம் செலவிட்டு ஊக்கம்விடாமற் நடத்தினெம். செந்தமிழில் எழுதப்பட்டு வருகிறபடியால் இப்பத்திரிகை நீடியாது என்றார் சிலர்; வேறுசிலர் ஞானபோதினிக்கு இறுதிவந்துற்றதென்றனர். ஆனால் உலகவனுபவமும் தமிழ் மாட்டன்பு முடையார் எம்முயற்சி நன்முயற்சி என்று கூறினரேயன்றித் தங்களுடைய இஷ்டஜன பந்துக்களிடம் வியந்துபேசிக் கையொப்பஞ்சேர்த்து அனுப்பினர். இருதரத்தினருக்கும் எம் வந்தனம்; ஏனெனின் முன்னோர்தங் கூற்று பின்னோர்செய் உதவியைப்போன்று எந்தம் ஊக்கமுயர்த்தியது.

ஞானபோதினி வெளியானபின்னர், யாது காரணத்தாலோ, தமிழபிமானிகள் ஒன்று சேர்ந்து தமிழ் மாதைப்போற்ற முயன்

று வருகின்றனர். திராவிட பாஷைகள் விருத்தியடையும்பொருட்டு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யும்படி சென்னைச் சர்வகலாசாலையிற் பேச்சு முண்டாயிற்று. இப்பொழுது சென்னையில் திராவிடபாஷா சங்கமொன்று ஏற்பாடாகின்றது. அதில் அனேக கனதன கவிகள் சேர்ந்திருக்கின்றனர். அச்சங்கத்தின் கருத்துக்களைப்பற்றி முன்னொரு சஞ்சிகையில் வரைந்திருக்கின்றனெம். எழுத்திற்கண்டவை நடையில் வருமாயின் திராவிட பாஷாபிவிருத்திக்கு இதுவே நல்ல காலமென்பதற் கையமின்று. ஊர்கூடிச் செக்குத் தள்ளுதல் என்ற நியாயமாய் முடியக்கூடாதென்பது எமது பிரார்த்தனை. இச்சங்கத்திற்குக் கிளைகள் திருச்சிராப்பள்ளி முதலான விடங்களில் ஏற்பட்டுவருகின்றன. இதுவும் நன்மைக்குறியே. இது விஷயத்தில் நாம் கவனிக்கவேண்டிய தொன்றுண்டு. இந்தியர்கள் ஆரம்ப சூரர்களென்பதும் நாவல்லர் என்பதும் அஃதேபோல் வாள் மானத்தில் நிற்க மாட்டார்க ளென்பதும். எங்கும் பிரசித்தி. இஃது பொய்க்கூற்றே யொழிய மெய்யினன்று என்பதைத் திராவிட பாஷா சங்கத்தினர் விளக்கிக்காட்டல்வேண்டு மென்பது எந்தம் விருப்பம்.

சென்னையில் கிறிஸ்தவக்கல்லூரி, இராஜதானிக்கல்லூரி முதலான கல்விச்சாலைகளிற் கற்றுவரும் மாணவர்கள் தமிழன்னைமேல் முன்னிலும் அதிகப்பாசங்காட்டி வருகின்றனர். அவர்களைப் பார்த்துச் சென்னை முத்தியாலுப்பேடை ஹைஸ்கூலில் வாசித்து வரும் சில தமிழ்ச் சிறுவர்களும் சபை கூடித் தமிழ்ப்பாஷையைப் பயிலும் முறைமைகளைக் கற்று வருகின்றனர். இரண்டு வாரத்திற்கு முன்னர் இச்சிறுவர் வேண்டுகோளின்மேற் சென்னைக் கிறிஸ்தவக்கல்லூரிப் பிரதம தமிழ்ப் பண்டிதராகிய பிரமஸ்ரீ வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியாரவர்கள் பி. ஏ. தமிழைப்பற்றி பிரசங்கஞ் செய்தனர். வெளியூர்களிலும் இது போன்ற சபைகள் ஏற்பட்டு நடக்குமாயின் நலம்.

ஆனல் இலங்கையைச் சார்ந்த யாழ்ப்பாணத்தில் தமிழபிவிர்த்தியின் பொருட்டுத் தக்கோர் கூடிச் சட்ட திட்டங்கள் செய்து வருஷாந்தரத்திற் சோதனையில் தேறினோர்க்குப் பரிசளித்து வருகின்றார்க ளென்பதை மனமகிழ்ச்சியுடன் உதய தாரகை, இந்து சாதனம், முதலான பத்திரிகைகளில் வாசித்து வருகின்றனெம்.

இவ்வாறு தமிழ் விஷயத்திற் சிரத்தை எடுக்கும்படி காலம் வந்துறுவதைக் கண்டு களிக்கின்றனெம். தமிழர் தமிழ்க்கிரந்தங்களை நன்குகற்றுப் பிறபாஷைகளில் நவமாய் வெளிப்படும் நூல்களை அப்பாஷைகளைக் கல்லாத நண்பருக்கும் பண்புடையாருக்கும் பயன்படுமாறு சுயபாஷைகளில் மொழிபெயர்த்துப் பிரசுரிப்பார்களானல் அன்னோர் பிறவிப்பயனை யடைவரென்பதற்கு ஐயமில்லை.

இது நிற்க. ஞானபோதினியின்மேல் அன்புற்று அது தழைத்தோங்கு மாற்றைச் சிந்தித்து மாணவருக்கு உபயோகமான பரீட்சை வினுக்களையும் சமாசாரங்களையும் சேர்க்கும்படி எம்மைத் தூண்டிய நண்பரனைவருக்கும் எம் வந்தனம்.

சென்ற இரண்டு வருஷங்களில் தமிழ்ச்சரிதர், இலக்கணம், பொருணூல், உடல்நூல், வைத்தியம், தத்துவம், கானம், நாடகம், கல்வி, சமயம், முதலான விஷயங்களைப் பற்றி, வாசகங்களும் கவிகளும் வரைந்தனுப்பிய பின் வரும் கனவான்களுக்கு நாம் எந்நாளும் நன்றி பாராட்டுவாம். இவர்களில் அனேகர் சென்னைச் சர்வகலாசாலையில் பி. ஏ. பட்டம் பெற்றவர்களென்பது நன்கு விளங்கும். இவர் போல மற்றவரும் ஞானபோதினிக்கு உதவி புரிய வேண்டுகின்றனம்.

1. பிரமஸ்ரீ தி. மு. சேஷகிரி சாஸ்திரியாரவர்கள் எம்.ஏ.
2. ,, டி. ஆர். இராமநாத ஐயரவர்கள் பி.ஏ. எல்.டி.
3. ,, வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியாரவர்கள் பி.ஏ.
4. ,, பிரணதார்த்தி ஹரசிவன் பி.ஏ.
5. ,, கல்யாணராம சாஸ்திரியாரவர்கள் பி.ஏ.
6. ,, சருக்கை - இராமசாமி ஐயங்காரவர்கள் பி.ஏ.
7. ,, சுந்தரம் ஐயரவர்கள் பி.ஏ.
8. ,, கோபாலசாரிய ரவர்கள்.
9. ,, பலராம ஐயரவர்கள்.
10. ,, ஸ்ரீநிவாசாச்சாரியா ரவர்கள்.
11. ,, ஸாமிநாத ஐயரவர்கள்.
12. ம-ா-ா-ஸ்ரீ, கள்ளப்பிரான் பிள்ளையவர்கள் பி.ஏ.
13. ,, முத்துராமலிங்கம் பிள்ளையவர்கள் பி.ஏ.
14. ,, லக்ஷ்மண பிள்ளையவர்கள் பி.ஏ.
15. ,, அனவரதவிநாயகம் பிள்ளையவர்கள் பி.ஏ.
16. ,, சேஷகிரிப் பிள்ளையவர்கள் பி.ஏ.

17. ம-ா-ா-ஸ்ரீ, இராமஸ்வாமியா பிள்ளையவர்கள் பி.ஏ.
18. ,, சங்கரலிங்கம் பிள்ளையவர்கள் பி.ஏ.
19. ,, திருமலைக்கொழுந்துப் பிள்ளையவர்கள் பி.ஏ.
20. ,, குப்புசாமி முதலியாரவர்கள் பி.ஏ.
21. ,, சுப்பிரமணிய ஆசாரியார் பி.ஏ.
22. ,, வேதாசலம் பிள்ளையவர்கள்.
23. ,, வித்வான் திருமயிலை-சண்முகம் பிள்ளையவர்கள்.
24. ,, வி. வே. கி. நாராயணசாமிப் பிள்ளையவர்கள்.
25. ,, சிவஞானயோகிகள்.
26. ,, சொக்கலிங்கம் பிள்ளையவர்கள்.
27. ,, யாழ்ப்பாணம்-கதிரைவேற் பிள்ளையவர்கள்.
28. ,, திரு எவ்வுளூர்-இராமசாமி செட்டியாரவர்கள்.
29. ,, குருவிக்குளம்-ஜமீன்தாரவர்கள்.
30. ,, சாமுவேல் பிள்ளையவர்கள்.

மேற்காட்டிய பெயர்களைத்தவிர, இனிவெளிவருஞ் சஞ்சிகைகளுக்கு நானாவிஷயங்களைப்பற்றி எழுதுவதாய் வாக்களித்திருப்பவர்களிற் சிலருடைய பெயரைமட்டும் இவண் வரைகின்றாம்.

1. பிரமஸ்ரீ, உ. வே. சாமிநாத ஐயரவர்கள்.
2. ,, சுந்தரராஜ ஐயரவர்கள் பி.ஏ.எல்.டி.
3. ,, சுவேதாரண்ய சாஸ்திரியாரவர்கள் பி.ஏ.
4. ,, இராமஸ்வாமி ஐயரவர்கள் பி.ஏ.
5. ,, சுப்பிரமணிய சாஸ்திரியாரவர்கள்
6. ,, சேதுராமபாரதியாரவர்கள்.
7. ,, ஸ்ரீரங்காசாரியரவர்கள்.
8. ம-ா-ா-ஸ்ரீ, சிவராம பிள்ளையவர்கள்.
9. ,, கந்தசாமிக் கவிராயரவர்கள்.
10. ,, மதுரை-சண்முகம் பிள்ளையவர்கள்.
11. ,, எம். பி. ஈசுவரமூர்த்தியா பிள்ளையவர்கள்.
12. ,, ஈக்காடு-இரத்தினவேலு முதலியாரவர்கள்.
13. ,, இராமநாதபுரம்-தங்கவேலுசாமித் தேவரவர்கள்.

## இப்பத்திரிகைக் கெழுதுங் கனவான்கள் தயைகூர்ந்து கவனிக்க வேண்டிய விஷயங்கள் :—

1. மையூருத கடிதாசியில் மையையே யுபயோகித் தெழுதக் கடவர்கள். எழுத்துக்களும் ஒன்றோடொன்று கலவாமல் தெளிவாயெழுதுதல் நலம். இவ்வாறு எழுதப்படாதகாலை அச்சடிப்

போரும் நாமும் படுங்கஷ்ட மிகுதியு முண்டென்பது முதலாவது கவனிக்க வேண்டிய விஷயம்.

2. பத்திரிகைக் கெழுதும் விஷயங்கள் கதாரூப் மாகவும், சாஸ்திர விளக்க ரூபமாகவும், நாடக ரூபமாகவும், சமயபோத ரூபமாகவும், கல்வி முறைவிளக்க ரூபமாகவும் பலதிறத்தினு மெழுதப் படலாம். இவற்றுட் கதையும் நாடகமும் அந்நிய பாஷையிலிருந்து தமிழிற் சுயபாஷைப் போக்கறிந்து மொழி பெயர்க்கப் பட்டனவாதல், தமிழிலேயே யுள்ள வான்றோர் நூல்கள் வேறு ரூபப்பட்டுத் தோன்றியாதல் இருப்பின் மிக்கநலமுடையவாம். அன்றி எழுதுவோர் யாரும் யாவரானும் எழுதப்படாததொரு கந்த மியற்றுவே மென்று புகுதல் சாலாதன்றே! மொழி பெயர்த்தலும் ஆன்றோர் நூல்களை யாசரித் தெழுதலும் இகழ்வுடையவென்று கொள்ளுவோர் இவ்விருவகை யொழிந்த பிறவகைகளிற் றம்மதியைச் செலுத்தி நல்விஷயங்க ளெழுதுக. சாஸ்திர விளக்கஞ் செய்வோர் பாமரர்க்கும் விளங்குமாறு எளிய நடையிலெழுதக்கடவர். சமய விஷயங்கள் சமரசமாயிருத்தலே சால்பு. இனி, செய்யுள் ரூபமாகச் சிறுநூல்கள் செய்தனுப்புவோரும் அவை யாவர்க்கும் விளங்கு மெளிய நடையிலெழுதப்படல் வேண்டுமென் றறியக்கடவர். பழையவழக்கம் பற்றி யமகந்திரிபில் யாத்த செய்யுட்கள் பத்திரிகைக்குப் பயன்படாவாகலின் அவை யொதுக்கப்படுமென்று முணரக் கடவர்கள்.

3. விஷயங்கள் ஒவ்வொரு சஞ்சிகையிலேயே முடியக்கூடியனவாயிருப்பின் நலம். தொகுதியாக எழுதி நீட்டிக்க விரும்புவோர் ஒருவருஷ சஞ்சிகைகள் கொள்ளுமளவறிந்து தம்விஷயத்தைச் சரிப்படுத்த வேண்டும். ஓராண்டெல்லையுங் கடந்து போமாயின் நூதனவருஷத்தோடு பத்திரிகை தொடங்குவோர் வருந்துவரென்பதைச்சற்று நோக்கக்கடவர்.

பத்திராதிபர்.

---

## கமலினி.

### அத்தியாயம்-XIV (தொடர்ச்சி).

மேற்கூறியார் அனைவருஞ் சிறிதுதூரஞ் சென்றதுந் திடீரெனப் பக்கத்தி லொருவித சப்தங்கேட்டது. அச்சப்தத்தாற் பயந்தவர் கமலினி, கனகமாலை, ஏகாம்பரம் ஆகிய இம்மூவரே. மற்றையோர் சிறிதும் அஞ்சாது சென்றனர். உடனே கமலினி,

"என்ன, அருகில் யாரோ வருகிற சப்தங்கேட்டது. மேற் செல்வதன்முன் அதனை யாராய்தல் வேண்டும். மனிதர் பின்றொடர்ந்து வருவதாகத் தோன்றுகின்றது" என்றாள்.

இப்பொழுது செல்பவர் யாவரும் நம் கமலினியை எஜமானியெனப் பாராட்டு கின்றாராகலின் அவளிவ்வாறு கூறியதும் உடனே முன்னர்ப் போகும் வீரர்கள் சுற்றித் திரும்பிப்பார்க்க ஆரம்பித்தார்கள். மதிமுகன் இன்னமும் சும்மாவிருத்தல் தகுதியன்றென வெளிவந்தனன். கண்ணிமைப் பொழுதின் வீரர்தம் உடைவாள்கள் உறைகளி னின்றும் வெளியே கழற்றப் பெற்றன. உடனே கமலினி கண்ணீர் ததும்பும் விழியுடன் மெய்ம்மயிர் பொடித்து மதிமுகனைத் தழுவிநின்றாள். இவர்கள் அனைவரும் இஃதென்ன புதுமையென அங்காந்த வாயுடன் நின்றனர். கனகமாலை,

"இவர்தாம் 'மதிமுகர்' எனப் பெயருடையவர். முன்னொரு விசை நம் கமலினியை மகா கொடுமையான தசையி னின்றுந் தப்புவித்தவர். நம் கமலினியும் இவரையே வரித்துளள். ஆதலின் நீங்கள் ஏதும் புதுமை பாராட்டா தீர்கள்" என்று யாவரு மிவர் தம் செயலைக்குறித்து ஐயுறுவண்ணம் கூறினள்.

இதுநிற்க. இதுகாறுங் காருண்ய வள்ளலென்ற நாமத்தைக் கூறினுமே யன்றி மற்று மவன் றன்மையைச் சிறிதுங் கூறிலம். காஞ்சிக்கும் பழஞ்சீவரத்திற்கும் மத்தியிலுள்ளது ஓரேகாடு. அக்காட்டிற் றான் காருண்ய வள்ள லொன்றரை வருடகாலமாய் வசிக்கின்றனன். இவனைச் சுற்றிநிற்பார் சுமார் மூப்பது பிரபுக்களும் நூறு போர்வீரர்களுமே. அக்காட்டி னிடையில் நிருமித்த ஒரு மண்டபம் மனிதர் பார்வைக்குத் தோன்றாது செடி கொடிக

ளான் மறைவுண்டு இருந்தது. அம்மண்டபத்தை யடைவது சாதாரணமாக அசாத்தியமே. அம்மண்டபத்தில் அவன்தன் பிரபுக்களுடன் காஞ்சியரசை யடையச் சமயம் பார்த்துக்கொண்டு காலத்தைக்கழித்துவந்தனன். **கோமளாங்கி** யென்பவள் ஒருத்தி காருண்ய வள்ளலுக்குச் சிசுருஷை செய்பவள். இவள் காருண்ய வள்ளல் மனைவியின் தோழி. மனைவி யிறந்தது முதல் இவள் இவனைப் பிரியாதிருந்தனள். இவளை யடிக்கடி வள்ளல் கமலினியின் க்ஷேமத்தை விசாரித்து வர அனுப்புவதுண்டு. அவளும் மாறு வேடம் பூண்டு மிகவும் இரகசியமாய்க் கமலினியின் சவுக்கியத்தை யறிந்து வந்து அரசனிட முரைப்பாள். தன் தநயையைக் காணவேண்டுமென்று வள்ளல் பேரவாக் கொண்டிருந்தனன். **மானினி** யென்பவள் ஒரு போர்வீரன் மகள். இவள் காருண்ய வள்ளலின் தானைத் தலைவனுன **மணிவண்ண** னென்னும் பிரபுவின்மீது காமுற்றிருப்பது சாதாரணமாக எல்லோர்க்குந் தெரியுமேனும் அவனுக்கு மாத்திரந் தெரியாது.

காருண்யவள்ளல் கமலினி தன்னிடம் வரப் போகின்றாளெனத் தெரிந்ததும், மிகவும் சந்தோஷத்துடன் வரும் வழிபார்த்திருந்தான். அனேக நாட்களாகப் பிரிந்த தன் கண்ணினுண் மணியெனப் பாராட்டும் மகளைச் சிறிது நேரத்திற்கெல்லாம் பார்க்கக் கூடுமெனின் ஒரு தந்தைக்கு எவ்வளவு ஆநந்தம் பெருகும்? அவ்வளவு சந்தோஷத்தினும் பதின் மடங்கு நம் காருண்ய வள்ளல் அடைந்தான். மற்றுந் துன்பத்தசையில் மனைவியு மின்றியிருக்கின்றவனல்லனோ? கமலினி முதலியோர் வெயின் மாலைப்பொழுதிற் காருண்ய வள்ளலை யடைந்தனர். தந்தையுந் தநயையுஞ் சந்தோஷ சாகரத்தி லாழ்ந்தனர். கமலினி மதிமுகன் சௌரியத்தையும், அவன் றனக்குச் செய்த உபகாரத்தையும் விசையை தன்னை அன்புடன் பாராட்டியதையும், தான் எவ்வாறு அரண்மனை நீங்கி இவ்விடம் போந்தன ளென்பதையும் சாங்கோபாங்கமாய்க் கூறினாள். காருண்ய வள்ளலும் மதிமுகனிடத்து மிகுதியும் அன்பு பாராட்டினனேயன்றி அவனை மணிவண்ணன் கீழ்த் தானைத்தலைவனாக ஏற்படுத்தினன். அதி சீக்கிரத்திற் காஞ்சியைக் கைப்பிடிக்கத் தக்க வுபாயங்களைத் தேடிக்கொண்டிருந்தார்கள்.

பதினொன்கா மத்தியாயம் முற்றிற்று.

## அத்தியாயம் XV.

"கொடுமை! கொடுமை! இக் கொடும்பா தகன்சொல்
கடுவெனப் பார்த்தென் கைகா னடுக்கின.
கைத்தவென் கண்ணுங் காதும்
இத்தனை துட்டரு மிருப்பரோ வுலகில்."

மிகவுஞ் சாக்கிரதையாகப் பாதுகாக்கும்படி அரசனே ஏவிய குற்றவாளி தப்பித்துக் கொண்டு சென்றதைப் பற்றி வீரமார்த்தாண்டன் மிகவும் மனம் வருந்தினான். கூடிய வரையும் மதிமுகனை மறுபடியுஞ் சிறையிட முயன்றும் பயன்படாமையைக் குறித்து விதியின் பயனேயென்று விசனப்பட்டான். அரசனுடைய கோபத்திற்குப் பாத்திர னானமையைக் குறித்துத் தன் விதியை நொந்தான், மனைவியை வைதான். ஏது செய்து ஏதுபயன். கடைசியில் மதிமுகன் தப்பிப் போனதற்கு அரசனே ஒருவாறு காரணனென்று சிறிது தேறுதலடைந்தான். அரசன் தன்னையழையாம லிருந்திடின் இவ்வளவு அரந்தையும் நேர்ந்திரா தென்று எண்ணினான். "அரசனது அந்தரங்கப் பகைஞரது சிறைச்சாலையன்றே யிச்சீவரச்சிறை. அவ்வாறிருப்ப ஏன் இக்குற்றவாளியைப் பற்றி முக்கியமாகக் கவனிக்க உத்தரவளித்தான்? அவ்வுத்தரவை யேற்றுத் திரும்புதற்கு முன்னரே குற்றவாளி பறந்தனன். இச்செய்கை சாதாரணமெனக் குணிக்கற் பாற்றன்று. ஏதோ தெய்வசங்கற்பமிருத்தல் வேண்டும்" என்று பலவாறு யோசித்துப் பிறகு அரசனிடமே சென்று அபயம் பெறல் வேண்டுமென்று தீர்மானித்தான். வீரமார்த்தாண்டன் மறுநாள் வெயின்மாலைப் பொழுதிற் காஞ்சி யரண்மனை யடைந்தான். அரசன் வீரமார்த்தாண்டனைக் கண்டதும் சந்தேகித்து,

"என்ன விசேடம்? நேற்றைச் சென்றவன் இன்றைக்கே வந்தனையே! யான் குறித்த குற்றவாளியைச் சாக்கிரதையாகப் பாதுகாத்துக் கொண்டிருக்கின்றனையா?" என்றான்.

வீரமார்த்தாண்டன் உடனே அரசன் காலில் வீழ்ந்து நடந்த வனைத்தையுங் கூறின னன்றியுந் தன்னை மன்னிக்குமாறும் வேண்டினன். அரசன் மிகவுங் கோபங்கொண்டு "ஏ! வீரமார்த்தாண்டா! உன் செய்கைக்கேற்ற பெயர் உனக்கு வைக்கவில்லை. எம்மு

டைய சிம்மாதனத்திற்கே கேடுவருமாறு செய்தனே. சாமானிய இராணுவத் தலைவனை யத்தகைய உயரிய பதவியில் வைத்தது எம் மேற் பிழை. இனி ஒருக்கணமேனு மவ்விட மிருக்கவேண்டாம். யான் வேற்று மனிதனை யவ்விடத்திற் கனுப்புகின்றேன்'' என்று கூறினன். வீரமார்த்தாண்டன்,

"தாங்கள் என்மீது அவ்வளவு கோபித்த லொண்ணாது. எப்பொழுது சிவரச்சிறைக்கு ஒருவன் வருகின்றானோ அப்பொழுதே அவன் மகா சாக்கிரதையுடன் பாதுகாக்கப்பட வேண்டியவன். இராசத்துரோகஞ் செய்தவனை யன்றிப் பின் எவர் அச்சிறைக்கு வரப்போகின்றார்கள்? தாங்களென்னை யழைப்பிக்க வேண்டுவதே யில்லை. என்னை யிவ்விட மழைப்பித்த சமயத்திற்றானே சிறையினின்றுங் குற்றவாளி தப்பித்துச் சென்றான். ஆசையால் அவன் தப்பிச் செல்லுதலே தெய்வசங்கற்பம் போலும்'' என்று கூறினன்.

அரசன் மீட்டும், "பிழையியற்றியது மன்றி எம்மீதே குற்ற மேற்றவுந் தலைப்பட்டனை. நன்றாயிருந்தது உன் புத்தி! என்முன் நில்லாதே. நாளையுனக்குச் சொல்லுகின்றேம்'' என்று கொதித்த பார்வையுடன் கூறினன்.

வீரமார்த்தாண்டன் மிகவும் விநயமாய், "யான் தங்கள்மீது குற்றங் கூறவில்லை. நடந்த விஷயத்தையன்றே யான் கூறினேன். தாங்கள் கோபஞ்செய்து கொள்ளக்கூடாது. என்மீது கருணை புரிந்து யான் செய்தபிழையைப் பொறுத்தருளவேண்டும். மற்றும் இவ்வொருவருடகாலமாய்ச் சிவரச்சிறையி லேதேனும் பிழை நடந்ததா?'' என்று கூறினன்.

"அக்குற்றவாளி யெம்மைக் கொலைசெய்ய எத்தனித்தவன். ஆகலினாற்றான் மிகவுஞ் சாக்கிரதையாய்ப் பாதுகாக்குமாறு கூறினேம். அவனோ தப்பிச்சென்றான். எச்சமயத்து எவ்வேடம் பூண்டு எம்மை யெதிர்க்கப் போகின்றானோ தெரியவில்லை. எல்லாவற்றிற்கும் நீ இனி அவ்விட மிருக்கக்கூடாது. நாளைக்காலையிற்றானே எம்மிடம் வரக்கடவாய். பகற் பொழுதெல்லா மெம்முடனேயே இருக்கக் கடவாய்'' என்று சத்தியகீர்த்தி கூறினன்.

"எது தங்களிஷ்டமோ அதன்படி நடக்கச் சித்தனா யிருக்கின்றேன்'' என்று வீரமார்த்தாண்டன் கூறி விட்டு விடைபெற்றுக் கொண்டு திரும்பிச் சென்றான்.

அரண்மனையை விட்டுச் சிறிதுதூரஞ் சென்றதும் ஒருமனிதன் தன்பின்னர் வருவதைக் கண்டான். அரண்மனைக்கு அருகிலுள்ள காவையணுகலும் அம்மனிதன் வீரமார்த்தாண்டனை நோக்கி "ஐயா! தாங்கள் சிறிது என் பொருட்டுத் தாழ்த்தல் வேண்டும்" என்று அதிகாரமாயும் வணக்கமாயுங் கூறினன். அவன் சொல்லியதாற் றிகைத்து "நீயாரப்பா? என்னிடத் துனக்கென்னவேலை? உடனேசொல், யான் முக்கியமான வேலையாய்ப் போகவேண்டும்" என்றான்.

பக்கலில் மரங்களினிடையில் நாலைந்து மனிதர் நகருவதாகச் சத்தங்கேட்டது. வீரமார்த்தாண்டன் காற்றினலென்று சும்மாவிருந்தனன். மற்றுந்தன் சௌரியத்தில் மிகவும் நம்பிக்கை யுற்றார்க்கு மவுட்டியத்தன மதிகமாக விருக்குமென்பது யாவர்க்குந் தெரிந்ததன்றே!

"யான் வினவுங் கேள்விகளுக்குத் தடையின்றி விடைபகர்கிற்பையேல் என் வேலையைச் சொல்லுகின்றேன்" என்று மாறுவேடம் புனைந்து நின்ற சுந்தரன் கூறினன்.

"என்ன நீ மிகவும் அதிகாரத்துடன் மரியாதையின்றிக் கேட்கின்றாய்? யான் இன்னனென்று தெரியுமா உனக்கு" என்று வீரமார்த்தாண்டன் பகர்ந்தான்.

"நீதான் வீரமார்த்தான்டன் என்னும் பெயரினை. சிவரச்சிறை காவலர் தலைவனன்றே நீ" என்றான் சுந்தரன்.

"யான் உன்னை யிதுகாறும் பார்த்திலேன். என்னை நீ எவ்வாறுணர்ந்தனை?" என்றான் வீரமார்த்தாண்டன்.

"இறைவனைப் பார்த்தவ ரெவருமில்லை. மற்றெல்லோரையும் இறைவன் கண்டுளன்" என்றான் சுந்தரன்.

"அப்பா! என்ன அடக்கமான குணம்! இறைவனுக்குச் சமானனென வொப்பிட்டுக் கொண்டனையே! நின் இயல்பே இயல்பு!!" என்றான் வீரமார்த்தாண்டன்.

"எது பரிகாசஞ் செய்யவுந் தலைப்பட்டனையோ? சும்மா இரு. அரண்மனையுள் நீ சென்ற தெதன் பொருட்டு? உடனே கூறுவாய். இல்லையேல்—" என்றான் சுந்தரன்,

"அதை வினவுதற்கு நீயாரடா? உனக்கு யான் கூறக் கடமைப்பட்டவனல்லேன்" என்றான் வீரமார்த்தாண்டன்.

"தானாகவே கூறப்போகின்றாயா? அன்றிப் பலாத்காரத்தாற் கூறப்போகின்றாயா?" என்றான் சுந்தரன்.

"நிராயுதபாணியாக விருக்கின்றாய் எனச் சும்மா விருந்தால் எது பேச்சுமிஞ்சுகின்றாய்" என்று வீரமார்த்தாண்டன் உறையினின்றும் வாளினை நீக்கினான். மேகத்தில் மறைந்தமின்னல் வெளித் தோன்றியதெனப் பிரகாசித்தது. சுந்தரனுஞ் சிறிது திகைத்தவனேனுஞ் சிறிது கூவினான். உடனே நான்கு போர்வீரர்கள் பூமாதேவியின் வயிற்றினின்று முற்பவித்தாரென மிகவுஞ் சீக்கிரமாக வீரமார்த்தாண்டனெதிரில் நின்றனர். வீரமார்த்தாண்டன் சிறிதும் தளராமற் பக்கலில் நின்ற வீரனைத் தன் கட்கத்தாற் றாக்கினான். நால்வரும் நாற்புறமாக வளைந்து கொள்வதன் முன் ஒரு மரத்திற்கு நேரே தன் முதுகைக்காட்டிக்கொண்டு இந்நால்வருடனும்போர்புரிந்தான். இந்நால்வர் ஊறு செய்வானெய்யுங் குறிகளைத்தடுத்தனனேயன்றி யவர்களுக்குச் சிறிதும் காயம்படுமாறு வீரமார்த்தாண்டன் ஒரு வீச்சுந் தன்வாளால் வீசவில்லை. அவர்கள் வீச்சுக்களைத் தடுத்துக்கொண்டே நின்றான். வெற்றி தோல்வி தெரியாமல் சமானமான போர் செய்வதனால் இருதிறத்தினருஞ் சிறிது களைப்புற்றனர். ஒருவரை யொருவர் உருத்துப்பார்த்துக் கொண்டு நின்றனர். ஒரு கணத்தில் வீரமார்த்தாண்டன் பாயும் புலியென இரண்டு வீரரை வீழ்த்திவிட்டு மற்றையவனை யூறுபடுத்தி நின்றனன். நான்காமவன் புறங்காட்டிச் சென்றனன். சுந்தரன் போர் நடந்துகொண்டிருக்கும் பொழுதே சென்றனன். வீரமார்த்தாண்டன் தெய்வகதியால் தப்பினேமென் றெண்ணினான். "அரண்மனையில் நடந்த விடயத்தை யிவர்கள் எதன்பொருட்டுக் கேட்க வேண்டும்? வழிபறிக்குங் கள்வரெனல் சாலாது. எவரையோ வழிமறிக்க எண்ணினார்களெனின் என்பெயரை யுரைத்தார்களன்றே! காருண்யவள்ளலின் சேனையைச் சார்ந்தவரோ? அவர்களாக விருந்தாற்றான் அரண்மனை விடயங்களை யாராய விருப்புற்றவர்களா யிருப்பார்கள். எல்லாவற்றிற்கு மரசனிடம் நாளைவந்ததுங் கூறுவா" மென்று விசையாய்ச் சீவரத்திற்குச் சென்றான். யாவற்

றையும் மனைவிக்குரைத்தான். அவள் மிருதியும் வெளியே வருத்தந் தோற்றுவித்தனளேனும் மனத்திற் சந்தோஷத்தை யடைந்தா ளென்பதிற் சந்தேகமில்லை.

பதினைந்தா மத்தியாயம் முற்றிற்று.

---

## அத்தியாயம்—XVI

"தூமகேது புவிக்கெனத் தோன்றிய
வாமமேகலை மங்கைய ரான்வருங்
காம மில்லை யெனிற்கடுங் கேடெனு
நாம மில்லை நரகமு மில்லையே."

பொழுது புலர்ந்தது. சீவரத்தினின்று வீரமார்த் தாண்டனும் அவன் மனைவியாய குணவதியும் இரண்டு காளைகள் கட்டிய பெட்டிவண்டியிற் காஞ்சியை நோக்கி வந்தனர். சுதந்தர மிகுந்த உத்தியோகத்தினின்றும் க்ஷணந்தோறும் அரசன் கோபத்திற்கும் சந்தோஷத்திற்கும் பாத்திரனாகும் படியான வேலைக்குத் தான் மாற்றப்பட்டதைப்பற்றி மிகவும் வருத்தப்பட்டான். மற்றும் தன் மனைவி பலரோடுங் கலக்கு மாறும், அநேகரைச் சிநேகஞ் செய்யு விசையை தனியேயிருத்தலினால் அவளுடன் உல்லாசமா யிருக்கு மாறும் நேரிடு மென்று வீரமார்த்தாண்டன் மிகவும் வருத்தப் பட்டான். எப்பொழுதும் மனைவியைப் பிரிய மனமிலனாகலான விபரீதமான எண்ணங்க ளெல்லா மவன் மனத்திலுற்பவித்தன. மற்றுக் குணவதியோ சிறையினின்றுந் தப்பி மறுபடியும் தன் குழுவுடன் சேர ஏகுங் கிள்ளையென மனமகிழ்ந்தாள். கணவனது கடோரமான சட்டுப்பாடுகளி னின்றும் உல்லாசமாக அரண்மனைக் குப்போகலா மென்னும் பேரவா அவளுக்கு மிகவும் சந்தோஷத்தை யுண்டு பண்ணிற்று. தன் மனைவியின் குணத்தை முற்றும் அறிந்தவனல்லன் வீரமார்த்தாண்டன். அவன் குணவதியை நோக்கி,

"எனக்கு அரண்மனைக்குப் போவதைக் குறித்து மிகவும் வருத்தமாயிருக்கின்றது. இவ்வளவு துன்பமு மப்பாதகக் குற்றவாளியால் ஏற்பட்டன. அவனை யான் காண்பனேற் சித்திரவதை செய்வேன்" என்று சொன்னான்.

"அரண்மனைக்குப் போவதனால் நமக்கென்ன வருத்தம் நேரப்போகின்றன? அரசனது நல்லெண்ணத்தை யடைந்தால் நல்ல ஸ்திதிக்கு வரலாம். மற்றும் பிரபுக்களுடனும், ஆஸ்தானிகருடனும் ஊடாட்டலாம்" என்றாள் குணவதி.

"உன்னினின்றும் பிரியுமாறு நேரிடுமோ வென்றுதான் மிகவும் வருத்தப்படுகின்றேன். மன்னன் மனைவியிலான். எங்குஞ் சுற்றித்திரிவான். அவன் மெய்காப்பாளனானால் மிகுந்த அரந்தைக்குட்பட வேண்டிவரும்" என்று வீரமார்த்தாண்டன் செப்பினன்,

"கிராமங்களில் வசித்தலைப் பார்க்கிலும் நகரங்களில் வசித்தலே மேலானது. நல்ல நாகரிகங்களைத் தெரிந்து கொள்ளலாம். விநோதக் காட்சிகளைக் காணலாம். கவுரவம் பெறலாம். எல்லா விதத்தும் மேன்மை யுறலாம்" என்றாள் குணவதி.

"அஃதென்னையோ? நீ அரண்மனையுள்ளாருடன் கூடிக்கொண்டு என்னைத் துறப்பையேல் இப்பொழுதே யான் அவ்விடஞ் சொல்லாமல் ஓடிக்காருண்ய வள்ளலுடன் சேருகின்றேன். என் உத்தரவின்றி வெளியேறுதலும் உல்லாசமாய்த் திரிதலுங் கூடாது இதற் குடன்படுவையேற் போகலாம். இல்லாவிடின் வழியை. மாற்றுச் செய்கின்றேன்" என்றான் வீரமார்த்தாண்டன். குணவதி பிறகு யாவற்றினுக்கும் யோசித்துக் கொள்ளலா மென்று மெல்லெனத் தன்கணவனைத் தழுவிக் கொண்டு,

"என்ன, அவ்வாறெல்லாம சொல்லுகின்றீர்களே. என் கண்ணாளராகிய உங்களைப் பிரிந்து யான் எவ்வாறு ஒரு கணமேனுந் தாழ்ப்பேன். உங்களை யன்றி யெனக்கு என்ன உல்லாச மிருக்கின்றது? தாங்கள் என் மீது அன்பு பாராட்டுவீர்களாயின் அதுவே போதுமானது. காட்டிலிருந்தாற்று னென்ன? குகையிலிருந்தாற்றான் என்ன? எல்லாவற்றிற்கும் அரண்மனையில் தாங்கள் நன்மையை யடையலாம். மேலான பதவிக்கு வரலா மென்றல்லவா கூறினேன்" என்று குணவதி மிகவும் பாசாங்குடன் மழலைமிழற்றுங் கிள்ளையெனக் கூறினாள்.

வீரமார்த்தாண்டன் தன் மனைவியின் ஆலிங்கனத்தால் மிக மனமகிழ்ந்து முத்தங்கொண்டு,

'ஒருபொழுது நினைப்பிரியே னொருபொருளு மதியேன்யான்
பொருவறுநின் முகநோக்கிப் புயல்வீழுந் துளிநோக்கி
விரதமனுட் டிக்குமொரு வியன்புள்ளை மானவுன்றன்
கருதரிய வின்பசுகங் காமித்து வாழ்வேன்யான்.'

என்று பாடி அவளைச் சந்தோஷித்தனன். குணவதியும் தன் நாயகன் தன் வலையிற்சிக்கியத னிமித்தம் மனமகிழ்ந்தாள். வழியினில் யாதொரு தடையு மின்றி இருவரு மரண்மனையை யடைந்தனர்.

சருக்கை-இராமசாமி ஐயங்கார்.

---

## விவேக சந்திரிகை—II.

---

### அஜாகருகதை.

நிருக சக்ரவர்த்தியின் விருத்தாந்தம்.

கிருதயுகத்தில் நிருக சக்ரவர்த்தி யென்னும் சூரிய வம்சத்தரசன் அறம் வழுவாமல் அரசு புரிந்து வந்தான். இவ் அவனிபாலன் அநேக வேள்விகளை யியற்றி எண்ணிறந்த கோதானங்கள் செய்தான். ஒரு நாள் ப்ரஹ்மசர்மா வென்னும் ஒற் அந்தணன் அரசனால் ஒரு கோதானம் கொடுக்கப்பெற்று அப் பசுவினைத் தன் வீட்டிற் கட்டிவைத்தான். அப்பசு தப்பித்துக் கொண்டு ஓடிப்போய், வெகு நாட்களாக நிருக சக்ர வர்த்தியின் பசுமந்தையில் ஒளித்திருந்தது. அரசன் இதை யறியாமல் அப்பசுவினை வேறொரு பிராமணனுக்குக் கொடை யளித்தான். இந்தப் பிராமணன் அதனைத் தன் அகத்தில் வைத்துக் கொண்டிருக்கையில், ப்ரஹ்ம சர்மா தன் பசுவைத் தேடிக் கொண்டு வந்து பின் சொன்ன வேதியன் இல்ல மடைந்து அதனைப் பெயரிட்டழைக்க, அஃதவனண்டை வந்து நின்றது. அப்பொழுது இவ்விருவரும் என்னுடையது பசு என்னுடையது பசு வென்று தம்முட் சச்சரவு செய்து கொண்டு நிருக சக்ர வர்த்தியின் பால் அணுகினர். அரசன் அந்தப்புரத்திலேயே இருந்து கொண்டு இவர்களை விசாரியாதிருந்தான். அவ்வளவில் அந்தணரிருவரும், செல்வச் செருக்கினால் அஜாக ருகனாயிருந்த நிருகனை ஜங்கம ஜந்துவாய்ப் போம்படி சபித்தனர். ஆகவே எவ்வளவு தார்மிஷ்டனாயிருந்தும் என்ன! நிருக சக்ர வர்த்தி தன் அஜாக்கிரதை யினாலல்லவா, சாபத்துக்கு இலக்காயினன்?— **உத்தரராமாயணம்.**

## மணிமந்தன் விருத்தாந்தம்.

அஷ்ட திக்பாலகர்களுள் ஒருவனும், தனத்துக்கெல்லாம் அதிபதியுமான குபேரனும், அவன் சேநாபதி மணிமந்தனும், பரிவார சகிதமாய்ப், புஷ்பக விமாநத்தில் இவர்ந்து சென்று கொண்டிருந்தனர். அப்பொழுது மணிமந்தன் அஜாக்கிரதையினால், மஹா தபோதநராகிய அகஸ்தியர் மீது எச்சி லுமிழ்ந்தான். அகஸ்தியர் நிமிர்ந்து பார்த்து, குபேரனுடன் செல்லும் மணிமந்தன் இக்காரியம் செய்தவனென உணர்ந்து, "அடே நீசனாகிய மணிமந்தா நீ அஜாகருகனாய், அலக்ஷ்யமாய் என்மேல் உமிழ்ந்த காரணத்தினால் நீ கேவலம் மனுஷ்யர்களால் ஜன சேனையுடன் நாசமாய்ப் போகக்கடவை" என்றும்,—குபேரனை நோக்கி 'அடேகுபேரா, உன்சேனாபதி செல்வச்செருக்கினால் அகங்கரித்து இவ்வடாதசெயலை யிழைக்கையில் நீபார்த்தும் வாளா விருந்தமையால், உம் பரிவார மவ்வளவும் மனுஷ்யர்களால் அதமாய்ப் போகும்படியான துக்கம் உனக்குச் சம்பவிக்கக்கடவது" என்றும் சபித்தார். பீமன் ஆரண்யத்திற் குபேரனைப் பரிவாரத்துடன் தோல்வியடைந்து பரிபவமுறச் செய்தான். இவ்வாறு முநிசாபம் நிறைவேறியது. ஆகையால் அஜாகருகர்களாய் எந்தக்காரியம் செய்தாலும், மிகப்பெரிய விபத்துக்கள் சம்பவிக்கும்.—**பாரதம்.**

### பதார்த்தங்களைப் பரீக்ஷித்துக் கிரஹித்தல்.

### அநுமான் சீதையை இலங்கையில் தேடிய கதை.

கிஷ்கிந்தை நகரத்தலைவனாகிய சுக்ரீவன் ஸ்ரீராமனது நட்பைப்பெற்று. சீதையைத் தேடும்பொருட்டுத் தன்வேலையாட்களைப் பலதிக்குக்களுக்கும் அனுப்பினான். அவ்வண்ணம் பலவிடங்களுக்கும் போயிருந்த வானரங்கள் சீதையை யெங்கணும் சாணாதவர்களாகித் திரும்பிவந்து சேர்ந்தனர். தென்பக்கம் சென்ற ஆஞ்சநேயன் நூறுயோஜனைகள் விஸ்தீர்ணமுள்ள கடலைத்தாண்டி இலங்கையையடைந்து எல்லாத்திக்குக்களிலும் தேடிக்கொண்டு, இராவணனது அந்தப்புரத்திற் சூக்ஷமரூபத்துடன் பிரவேசித்தார். அப்பொழுது அர்த்தராத்திரியாயிருந்தது. சகல ஜீவராசிகளும் அருந்துயிலில் அமர்ந்திருந்தன. அநுமார் அவ் அந்தப்புரத்தில் ஹம்ஸ தூலிகா தல்பத்தின்மேல் இராவணனுடன் சயநித்திருந்த மண்டோதரியைக் கண்டான். இம்மண்டோதரி ரூபத்திற் கோமளாங்கியான சீதையை யொத்திருந்தாள். ஆகையால் ஆஞ்சநேயன் அவளைச் சீதையென்றே கருதினவனாய்ப் பதைபதைப்படைந்து "ஹா! ஹா! காரியம் மிஞ்சிப்போய் விட்டதல்லவா! இக்கொடியனாகிய இராவணன் துர்ப்புத்தியினால் ஜநக நந்திநியினது கற்பை அழித்தானே. இனி என்ன செய்வேன்!" என்று சிந்தித்துக்கொண்டு சாவதானமாய் மண்டோதரியின்

தேகமெல்லாம் பரீக்ஷித்தான். கடைசியில் மாருதி அவள்பாதங்களைப் பிரிசோதித்து பார்த்துத் தன்மனத்திற்கு, ள்" ஜானகியின் பாதங்களிற் பத்மரேகை யுண்டென்று ஸ்ரீராமன் அருளியிருக்கின்றார், இவள்காலில் காகரேகை யிருக்கின்றமையால் இவள் மண்டோதரியே யாதல் வேண்டும். அந்தோ, பதிவிரதா சிரோமணி யாகிய அம்மை திவியின்கண் நான் வாளா தோஷாரோபணம் செய்து மஹா பாதகத்துக் காளானேன் அல்லவா! ராம! ராம! யான் இவளது அடையாளங்களைச் சரியாய்ப் பரீக்ஷியாது போயிருப்பேனேயாகிற் காரியமெல்லாம் விபரீதமாகி ஸ்ரீராமனுக்கு எத்தகைய அபகீர்த்தி சம்பவித்திருக்கும்!" என்று நினைத்துக்கொண்டே வெளியே சென்றான். அவ்விடத்தி னின்றும் அஞ்சனை மைந்தன் இராவணனது அசோக வனம்புக்கு, வைதேஹியைத் தன் கண்ணாரக்கண்டு களிகூர்ந்தான். இப்படியே நாமும் ஆஞ்சநேயனைப்போற் பார்ப்பதிற் சிறிதுசாவதானத்துடன் நன்றாய்ப்பரீக்ஷித்து விஷயங்களைக் கிரஹித்தல் வேண்டும்.— **ஸ்ரீமத்ராமாயணம்.**

**எப்பொருளும் பயனற்றதன்றெனை அறியற்பாலது.**

**ஜடபரத ரிஷி விருத்தாந்தம்.**

கிருதயுகத்தில் பரதமஹாராஜன் வெகுதார்மிகனாய் தன்னுயிரைப்போல் மன்னுயிரைப்பரிபாலித்து வந்தான். உலகவியாபாரத்தில் எத்தனைகால மிருப்பினும் அவ்வளவுக்கும் கஷ்டம் அதிகமாகுமென்று ஆலோசித்து, தன் குமாரனுக்குப்பட்டங்கட்டிவிட்டுத் தான் தவஞ்செய்யும் பொருட்டு கானகம் சென்றான். அவனுக்கு அந்த ஜன்மம் போய் பிராமண ஜன்மம் வந்தது. ஓர் அக்கிரகாரத்தில் ஒரு வேதியனுக்குப் புதல்வனாய்த் தோன்றினான். இக்குழந்தை களிமண்கட்டிபோல சிறிதும் அசையாமல் ஓரேயிடத்தில் இருந்தமையால், ஜடபரதன் என்னும் பெயரால் அழைக்கப்பெற்றது. அன்னம் போட்டால் சாப்பிட்டுக்கொண்டும், தண்ணீர் கொடுத்தால் அருந்திக்கொண்டும் இருக்கும். இல்லாவிடில் வெறுமனேயாவதிருக்கும். இப்படியிருந்தமையால் எல்லாரும் இஃதோர் பயனற்ற பண்டமெனக்கருதித்தெருவில் உட்காரவைத்தார்கள். தெருவில் போகின்றவர்களெல்லோரும் "இந்தப்பூதத்தைப் பாருங்கள்" என்று தேங்காயுடைத்தாற்போல் அக்குழந்தையின் தலையில் குட்டிவிட்டுப் போவார்கள்.

சிலநாள் சென்றபின் இவன் மானுட வடிவாகவாவது இருக்கட்டுமென்று வயலில் கொண்டுபோய் வைத்தார்கள். ஞானியாகிய ஜடபரதர், யார் என்ன செய்தாலும் ஒன்றையும் பாராட்டாமல் தன் பிரமஞானத்தில் உலகத்தை மறந்திருந்தார். இவ்வாறிருக்கையில் ஒருநாள் ஜநகமஹாரஜா பல்லக்கில் உட்கார்ந்துகொண்டு, கபிலர்பால் ஸாங்க்யஸித்தாந்த உபதேசம் பெறும் பொருட்டு அவ்வயலின் வழியே போய்க்கொண்டிருந்தார். பல்லக்கைச் சுமக்கும் ஜனங்

கள் எண்ணிற் குறைந்தவர்களாயிருந்தமையின், அப்பொழுது பெருத்த சரீரத்துடன் பூதம்போல் வயலில் உட்கார்ந் திருந்த ஜடபரதனைப் பயனற்றவரெனக்கருதி இழுத்துக் கொண்டு சென்று அவரைப் பல்லக்கைச் சுமக்கப் பண்ணினர்.* ஜடபரதர் மாத்திரம் தரையில் ஜந்துக்கள் காலின் கீழகப்பட்டு நசித்துவிடாம லிருக்கவேண்டுமென்று பாவத்துக்குப் பயந்தவராய் வெகு சாக்கிரதையாய் தாண்டித்தாண்டி அடிகளை வைத்துக்கொண்டு போனார். * ஜடபரதருடன்கூடப் பல்லக்கு சுமந்தவர்கள் சரியாய் அடிவைத்து பாரத்தை சுமந்து சென்றனர். இதனால் உள்ளே உட்கார்ந்திருந்த ஜநகனுக்கு அதிர்ச்சி அதிகமாய் உண்டாயிற்று. ஜநகன்—நீ நிரம்ப மெல்லியவனாயிருக்கின்றாயா ? பல்லக்கைச் சுமந்துகொண்டு சரியாய் நடக்கமுடியாதா ? என்று ஜடபரதனைப் பரிஹாசம் செய்தான். அப்பொழுது பிரமஞானியாகிய ஜடபரதர் தனக்கிப்பொழுது சரியானசமயமும் சரியான பாத்திரமும் கிடைத்த தென்று ஜனகனைநோக்கி—ஐயா, அரசனே, நீயிவ்வளவு அஞ்ஞானியாயிருக்கலாமா ? நான் சுமக்கிறதென்றால் என்ன ? நீ உட்கார்ந்திருப்பதென்றால் என்ன ? நான் நீ என்னும் பேதம் உண்டா ? உலகத்தில் பிராப்த வஸ்துவாகிய பிரஹ்மம் எவ்விடத்திலும் நிறைந்து நானாரூபமாய்க் காணப்படுகின்றது. இதையறியாதவர்களே பதார்த்தங்களின்கண் பேதம் கற்பிப்பவர்கள்—என்று வேதாந்தஸாரத்தை யெடுத்துச்சொன்னார். இதைக் கேட்டபின்னர் ஜனகன் பல்லக்கினின்று கீழே இழிந்து நமஸ்காரம்செய்து, "ஸ்வாமி,' என் அபராதத்தை க்ஷமித்தல்வேண்டும்," என்று வேண்டிக்கொண்டு அவராலேயே ஸாங்கிய ஸித்தாந்தத்தை யுபதேசிக்கப்பெற்றான். இதனால் எந்தமனிதனானாலும், எவ்வளவு அற்பமாய்க் காணப்பட்டாலும் அவனை அலக்ஷ்யம் செய்யலாகாதென்பது போதரும்.—பாகவதம்.

அமந்த்ரமக்ஷரம் நாஸ்தி நாஸ்தி மூலமனௌஷதம் ।
அயோக்ய: புருஷோ நாஸ்தி யோஜகஸ்தத்ர துர்லப: ॥

அமந்த்ரேமக்ஷரம் நாஸ்தி நாஸ்திலே மனௌஷதம்

அயோக்ய : புருஷோநாஸ்தி யோஜகஸ்தத்ரதுர்ல்லப :

மந்திரமாகாத எழுத்தில்லை ! மருந்தாகாத வேர் இல்லை ; அயோக்யனான (பயன்படாத) புருஷனில்லை. ஆனால் இவற்றைச் சரியாய் உபயோகிப்பவன் கிடையாது (அருமை) - சுக்ரநீதி.

## இளமைப் பழக்கம்.

### கிளிப்பிள்ளைகள் விருத்தாந்தம்.

நைமிசாரண்யத்தில் ஒரு மாமரத்தின் பொந்தில் ஒருகிளி இரண்டு குஞ்சுகளை யீன்று அவற்றை வளர்த்துக் கொண்டு வந்தது. ஒரு நாள் தீனி கொண்டு வரும்பொருட்டு தாய்க்கிளி வெளியே போயிருந்தது. அச்சம

யத்தில் ஒருவேட்டைக்காரன் வலையை வைத்துக்கொண்டு காத்திருந்தான். கிளிக்குஞ்சுகள் கூட்டினின்றும் வெளியே வந்து மெள்ள மெள்ள மேற்கிளை யினின்று கீழ்க்கிளைக்கு வந்துகொண்டே இறங்கி வலையில் விழுந்துவிட்டன. விழுந்ததும் வேட்டைக்காரன் அவற்றைப் பிடித்துத் தன்பையில் போட்டுக் கொண்டு போய்க் கொணடிருந்தான். அவற்றில் ஒருகுஞ்சு பையில் சிறிது கிழிசலாய்த் தோன்றிய ஒரு சந்தில் புகுந்து சப்தம் செய்யாமல் மெது வாய் அருகிலிருந்த ஓரிருஷி யாசிரமம் போய்ச்சேர்ந்தது. அங்குள்ள ரிஷி குமாரர்கள் பிராண பயத்தினால் பறந்தோடிவந்த சுகத்தைப் பிடித்துக் கொண்டு ஆதரவுடன் அதற்கு ஆஹார மளித்தனர். இது ரிஷிபோஷணையை யடைந்து அங்கே தங்கிவிட்டது. வேடன், ஒரு குஞ்சு பறந்தோடி விட்ட தைக்கண்டு, அதனை மறுபடியும் பிடிக்க முடியாமல், தன்னிடத் திருந்த மற்றொன்றைப் பத்திரப் படுத்திக் கொண்டு, சமீபத்தி லிருந்த ஒரு பட்ட ணத்தை யடைந்து அங்குள்ள ஒரு கசாப்புக் கடைக்காரனுக்கு அதை விற் றான். அதை அவன் கூட்டில் வைத்து தன் வீட்டிலும் கடையிலும் கட்டி வைத்துக்கொண்டு போஷித்து வந்தான். இப்படியிருக்கும்பொழுது ஒரு நாள் அக்கிளியானது, கூட்டின் கம்பியொன்று தளர்ந்திருந்தமையால் அதை மெள்ள விலக்கிக்கொண்டு அவ்வழியாய்த் தப்பித்துக்கொண்டு நைமி சாரண்யம் போய்ச்சேர்ந்தது. அவ்வழியே வந்துகொண்டிருந்த ஓர் வேதி யன் வழிநடந்த களைப்பினால் அந்தக்கிளியிருந்த மரத்தின்கீழ் வந்துட்கார்ந் தான். அப்பொழுது கிளியானது—அவன் யாரோ வந்திருக்கின்றான்; வெட்டு! குத்து! ஆட்டுமாம்சம் ஆறுகாசு! கோழியிறைச்சி மூன்றுகாசு! மூஞ்சியிலே போட்டேன், போபோ உன்பழைய துஸியையெடு! என்று கத்திற்று. பிராமணன், இதென்ன, இக்கிளி கெட்டவார்த்தைகளைப் பாடுகின் றது. இதன் சகவாஸம் யோக்கியமானதன்று என்று வழியைத்தொடர்ந்து போய் ஒரு ஸரோவர்த்தைக்கண்டான். அதன் கறையிலிருந்த மரத்தின்கீழ் உட்கார்ந்தான். ரிஷிகளின் பரணசாலையில் வளர்ந்தகிளி மரத்தின்மேல் உட் கார்ந்திருந்தது. அதுகீழே உட்கார்ந்திருந்த பார்ப்பானைப் பார்த்து "ஸ்வாமி, ஸ்வாகதமா? சிரம பரிஹாரம் செய்துகொள்ளுங்கள். இதோ தங்களுக்கு வேண்டிய கனிகள் இருக்கின்றன. புஜித்து உங்கள் க்ஷுத்பாதையைத் தீர்த் துக்கொள்ளுங்கள். தங்களுடைய தர்சனவிசேஷத்தினால் அடியேன் தந்யனா னேன்." 'ஸத்யம்வத,தர்மஞ்சர' என்று சப்திக்கத்தொடங்கியது. அந்தப் பிராமணன் அதைக்கேட்டு ஆனந்தமும் ஆச்சரியமுமடைந்து கிளியை எதிட் டுப்பார்த்து "ஓ சுகமே,இப்பொழுது அரைநாழிக்குமுன் ஒருமரத்தின்கீழ் உட் கார்ந்தேன். அங்கிருந்தகிளி துர்பாஷைகள் பேசிற்று. அதைச் சகியாமல் இங்கேவந்தேன். நீ இவ்வாறு மனோரஞ்சகமாய்ப்பேசி உபசரிக்கின்றாய். இஃதென்ன ஆச்சரியம். இப்படி யுங்கள் சுபாவங்கள் வேற்றுமைப்பட்டிருப் பதற்குக்காரணம் என்னே? என்று வினவ, அதற்கு கிளியானது, 'ஸ்வாமீ,

இதன் உண்மையைத்தங்களிடம் விண்ணப்பம் செய்கிறேன். நாங்களிருவரும் ஒரு தாயின் பிள்ளைகள். வேட்டைக்காரன் கையில் அகப்பட்டு நான்தப்பித்துக்கொண்டு முனிவர் தபோவனம் சேர்ந்தேன். அது கசாப்புக்காரனிடம் சேர்ந்தது. நான் முனிவர்கள் பேசும் வார்த்தைகளைக் கேட்டு அவ்வாறு பேசுகின்றேன். அது கசாப்புக்காரன் கடையில் அவன் பேசும் பேச்சுகளைக் கேட்டு அவ்வண்ணம் பேசுகின்றது. எங்களிருவரது குணபேதத்துக்குக் காரணம் எங்கள் பால்யாப்பியாசமே "இளமைப்பயிற்சி" என்றது. ஆகையால் சிறுபொழுதிலேயே நன்னெறியைப் பின்பற்ற வேண்டும்.
—பாரதம்.

தி. அ. ஸ்வாமிநாத ஐயர்.

---

## காதம்பரி.

---

### ஐந்தாம் மத்தியாயம்.

### வேட்டைச்சிறப்பு.

ஒருகால் காலைச்சந்தியி னிராகத்தாற்சிவந்து ஆகாய கமலினியின் மதுவினாற்சிவந்த இறக்கைகளையுடைய விருத்த ஹம்ஸ மென்னும்படி சந்திரன் மந்தாகினியின் மணற்குன்றினின்று மேல்சமுத்திரக் கரையினிலிறங்க, கிழஞ்சென்ற இரங்கு வென்னு மானின் ரோமம் போல் வெளுத்து, திக்சக்கிரம் விஸ்தாரத்தையடைய, கஜ ரக்தத்தினாற் சிவந்த சிங்கத்தின் சடைமயிர் போன்ற வண்ணமாயும், காய்ச்சிய அரக்கின் கம்பிகள் போலச் சிவந்ததாயும், விஸ்தாரமாயும் உள்ள சூரிய கிரணங்களால் பத்மராக ரத்னக்குச்சித் துடைப்பங்களாற் போலும் ஆகாய குட்டிம புஷ்பங்களனைய நக்ஷத்திர கணங்கள் விலக்கப்பட, சந்தி செய்வதனிமித்தம் உத்தர திக்கிலுள்ள சப்தருஷிமண்டலம் மானஸ ஸரஸின் கரையைக்குறித்தென இரங்க, கரையில் மோதி உடைந்த சிப்பியினின்று தெரித்த முத்துக்களின் சமூகத்தை அருணன் கையினாற் றள்ளுண்டு கீழ்நழுவிய நக்ஷத்திரக் கூட்டத்தைப் போலும் வெண்மையாக்கப்பட்ட மணற்கரையையுடைய மேற் சமுத்திரம் வகிக்க, பனித்திவலைகளை வர்ஷிப்பதாயும் விழித்த மயில்களுடன் கூடியதாயும் பராக்கிரமிக்கும்சிங்கங்களுடையதாயும் பிடிகளின் கூட்டத்தால் எழுப்பப்படும் மதகஜங்களையுடையதாயும் உள்ள வனமானது இரவின் சலத்தால் மங்கிய மகரந்தப் பொடியையுடைய புஷ்ப சமூகத்தை உதயகிரி சிகரத்தில் நிற்கும் சூரியனைக் குறித்தென பல்லவங்களாகிய அஞ்சலிகளால் வகிக்க, கழுதையின் ரோமம் போல் புகைவண்ணமான வனதேவதைகளின் உப்பரிகையன்ன விருட்ச நுனிகளில் தபோவன அக்கினிஹோத்திர தூமரேகைகள் தர்மக்கொடிகள் போலும் புறாக்களின் கூட்டம்போலுங் காணப்பட, பனித்

துளியை வகிப்பதாயும் கமல வனத்தை யசைப்பதாயும் சுரதத்தினாற் சோர்வுற்ற வேடக் கன்னிகளின் வியர்வை நீர்த்துளியைத் துடைப்பதாயும் காட்டெருமைகள் அசைவு போடுமமயம் கக்கிய நுரையின் விந்துவை வகிப்பதாயும் அசையும் தளிர், கொடி இவையிற்றினுக்கு நர்த்தனோப தேசத்தில் இச்சையுள்ளதாயும் மலரும் தாமரைகளின் மதுத்துளிகளை நிரம்ப வர்ஷிக்கச்செய்வதாயும் குசுமவாசனையினால் களிப்புற்ற வண்டுக்கூட்ட முடையதாயும் இரவின் முடிவிலுண்டான ஜாட்டியத்துடன் கூடியதாயும் மெல்ல மெல்ல சஞ்சரிப்பதாய், காலைக்காற்றுவீச, கமல வனத்தை எழுப்பும் மங்கள பாணர்களாயும் யானைக் கபோல பேரிகை களாயும் ஆம்பல்களின் உட்புறத்தில் நெருக்கமாய் மூடிய தளங்களின் பக்கங்களிற் றூக்கிய இறக்கைகளின் சேர்க்கையுடன் கூடியதாயுமுள்ள வண்டுகளின் உங்காரங்கள் தொனிக்க காலைக்குளிர் காற்றினால் வீசப்பெற்று காய்ச்சிய அரக்கினால் கெட்டி செய்யப்பட்ட இமைகளுடன் கூடியனபோல் தூக்கக்கலக்கத்தினால் மந்தமான* தாரங்களையுடைய கண்களை கரம்புநிலத்தில் படுத்து புகைவண்ணமான இருதய ரோமவரிசையை யுடைய வனமிருகங்கள் மெல்ல மெல்லத் திறக்க, வேடர்கள் இங்கு மங்குஞ் சஞ்சரிக்க, பம்பாசரசின் கலஹம்சங்களின் கோலாகல மானது செவிக்கினிப்பை உண்டாக்க, மயில்களை ஆடச்செய்து மனோகரமான வனகஜங்களின் காதுகளாகிற தாளசப்தங்கள் உல்லாசத்தை யடைய, கிரமமாய் ஆகாசமார்க்கத்திலிரங்குகிற சூரியனாகிற யானையின் கீழ்நோக்கிய நுனியுடைய சாமரங்களோவென (மஞ்சளும் சிவப்புமாயுள்ள கிரணசமூகங்கள்,) காணப்பட, மெள்ளமெள்ள சூரியன் உதயத்தை யடைய, பம்பாசரசின் அருகாமையிலுள்ள தருக்களின் உச்சியில் சஞ்சரிப்பதாயும் கிரிசிகரங்களில் நிற்பதாயும் சூரியனிடத் துதித்ததாயும் அபகரிக்கப்பட்ட † தாரையை யுடையதாயும்முள்ள பாலாதபமானது சுக்கிரீவன்போலும் வனத்தை ஆக்ரமிக்க, நன்றாய்ப்பொழுதுவிடிய, சீக்கிரத்தில் பகலின் எட்டாவது பாகத்தை யடைந்து சூரியன் நன்றாய்ப் பிரகாசிக்க, கிளிகள் இஷ்டப்பிரகாரம் திக்குகள் தோறுஞ்செல்ல, மரக்கூடுகளில் மறைந்து அசையாதிருக்கும் குஞ்சுகளுடன் கூடியிருந்தாலும் சப்தமின்மையால் அவ்விருட்சம் சூன்யமானது போற்தோன்ற, எனது பிதாவும் மரப்பொந்திலேயே யிருக்க, யானும் குழந்தையாதலின் பலமற்ற சிறு இறகுகளுடன் பிதாவின் சமீபத்தில் பொந்திலிருக்க, திடீரென்று அம்மகா வனத்தில் வசிப்பவை யெல்லாம் நடுங்கச்செய்வதாய் பரபரப்பாய்க் கிளம்பும் பட்சிகளின் இறக்கைச் சப்தத்துடன் கூடியதாய், பயந்தயானைக் குட்டிகளின் சீத்காரத்தால் விருத்தி யடைந்ததாய், அசையுங் கொடிகளாற் கலங்கிய மதங்கொண்ட வண்டுகளின் நாதத்தால் அதிகரித்ததாய், உயரத் தூக்கிய மூக்குடன் அலையும் வனவராகங்களின் அரவத்தால் பயங்கரமாய்

* பொம்மை † நட்சத்திரம், வாலியின் மனைவி

கிரிகுகைகளிற்றூங்கி யெழுந்த சிங்கங்களின் நாதத்துடன் சேர்ந்ததாய் தருக்கள் ஆட்டங்கொள்ளும்படி பகீரதனால் இரக்கப்பட்ட கங்காப்பிரவாகத்தின பேரிரைச்சல் போன்றதாய் வனதேவதைகள் பயத்துடன்கேட்கப்பெற்றதாய் வேடர்கள் கோலாகலத் தொனியானது பரவிற்று. கேட்டதும் நான் இதுவரையில் கேளாததால் மிகவும் நடுக்கமுற்று குழந்தையாதலின் காதுகளை மூடிக்கொண்டு பயத்தினாற் கலங்கி சமீபத்திலிருந்த பிதாவையே கதியாய் நினைந்து அவரது ஜரையினால் தளர்ச்சியுற்ற இறக்கைகளின் நடுவை யடைந்தேன்.

அதன்பின் பரபரப்புடன் "இதோ கஜேந்திரனால் ஒடிந்த தாமரையின் வாசனை", "இதோ பன்றிகளால் கடிபட்ட சோரைக்கிழங்குரசத்தின் வாசனை" "இதோ யானைக் குட்டிகளா லொடியுண்ட ஆத்தியின் கசப்பு வாசனை", "இதோ விழுந்த பழுப்புகளின் சலசலசப்தம்" "இதோ காட்டெருமைகளின் வச்சிரக் கொம்பு நுனிகளால் பெயர்க்கப்படும் புற்றுகளின் தூளிகள்.", "இதோ மான் கூட்டம்", "இதோ காட்டானைக் கூட்டம்", "இதோ பன்றிவர்க்கம்". "இதோ வனமகிஷ பிருந்தம்", "இதோ மயில் கூட்டத்தின் சப்தம்.", "இதோ காடைகளி னினிய கூச்சல்.", "இதேம் குரரிப்புள் ளோசை" "இதோ சிம்மகத்தினாற் பிளவுண்ட கும்பத்தையுடைய யானையின் பிளிறல்", "இதோ ஈரச்சேற்றினால் அழுக்கடைந்த பன்றிவரிசை.", "இதோ நூதனமான புல்லின் ரசத்தினால் கறுத்த அசைவு போடும் மீான்களின் நுரைக்கட்டிகள்", "இதோ மதங்கொண்ட கந்தகஜத்தின் கன்னத்தைச் சொரிந்து கொண்டதனால் உண்டான வாசனையைக் கிட்டிச் சப்தஞ் செய்யு மதுகர ரீங்காரம்.", "பாணம் விழுந்ததனால் உண்டான ரக்த பிந்துக்களால் நனைந்தபழுப்புகளுடைய இது புள்ளிமானின் மார்க்கம்." இவை கஜத்தின் கால்பட்டுக் கசங்கிய தருவின் தளிர்கள்." "இதோ கட்கிமிருகங்களின் விளையாட்டு." "இதோ நகனுனியாற் கீறுண்டு சமனற்றதாயும் இரத்தத்தினால் சிவந்தும் யானைமுத்துக்களினு லழகுற்றதாயு முள்ள சிங்கத்தின்மார்க்கம்.", "இதோ புதிதாய்ப் பிரசவித்த மான் பேட்டின் கற்பரக்தத்தால் சிவந்தபூமி.", "இதோ கூட்டத்தினின்று பிரிபட்ட கஜேந்திரனின் மதசலத்தினால் மலினமாயும், வனமாகிய மங்கையின் கூந்தலெனும்படியாயுமுள்ள சஞ்சார வீதி.", "இதோ சமரியின் கூட்டம் தொடருங்கள்". "இது உலர்ந்த மிருகமலத்தால் கெட்ட வனபூமி, சீக்கிரஞ் செல்லுங்கள்." "மரத்தின் மேலேறுங்கள்" "திசைகடோறும் பாருங்கள்" "சப்தத்தை யுற்றுக்கேளுங்கள்" "வில்லையெடுங்கள்" "சாக்கிரதையாய் நில்லுங்கள்." நாய்களைவிட்டு விடுங்கள்" என்று ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டு வேட்டையில் அவாவினராய் மரங்களால் மறைவுபட்ட தேகங்களையுடைய ஒரு பெரியஜனக்கூட்டத்தின் காட்டைக்கலக்கடிக்கும் கோலாகலத்தைக் கேட்டேன்.

சிறிது நேரத்திற்கெல்லாம் பூச்சினால் நனைந்த் மிருதங்கத்தின் தொனி போல் கம்பீரமாயும், மலையின் இடுக்குகளில் விருத்தியடைந்து திரும்பும் எதிரொலியால் உரத்ததாயும் உள்ளவேடர் சரத்தினாலடிபட்ட சிங்கங் களின் கர்ச்சனையாலும், பயந்த பெண்யானைகளினின்று பிரிந்தனவாயும், தனித்துச்சஞ்சரிப்பனவாயும் இடைவிடாது துதிக்கையை யடித்தலால் சப் தத்துடன் சேர்ந்ததாயும் மேக கர்ச்சனையை யொத்ததாயும், உள்ள கஜயூத பதிகளின் கண்ட கர்ச்சனையினாலும், வேகமுள்ள வேட்டை நாய்களால் பங் கமடைந்த சரீரமுடையனவாயும் சஞ்சலமாயும் பயத்தினால் கலங்கியும் இருக்கும் விழிகளையுடையனவாயு முள்ள மான்களின் தீனவொலியாலும், பதிகள் கொலையுண்டமையால் வியோகமடைந்து குட்டிகளால் தொடரப் பட்டு தூக்கிய காதுகளுடன் சப்தத்தை நின்று நின்று கேட்டு இங்குமங்கும் பிரமிக்கும் பெண்யானைகளின் புதிய பதிவிநாசசோகத்தால் தீர்க்கமான சீத் காரத்தினாலும், சிலநாள் முன்னர் பிரசவித்தனவான பெண்கட்சி மிருகங் கள் பயத்தினால் குட்டிகளை நழுவவிட்டுத் தேடுவதில் கண்டம் விட்டு அதிதீனமாய்க் கதறுஞ் சப்தத்தாலும், தருநுனிகளினின்று கிளம்பி வெகு பயத்துடன் செல்லும் பறவைகளின் கூக்குரலாலும், பசுவைத்தொடர்ந் தோடும் வேடர்களின் கால்களினால் ஏககாலத்தில் பலமாய் உதைபட்ட பூமிக்குக் கம்பத்தை யுண்டாக்கக்கூடிய சரண சப்தத்தாலும், காதுவரையி விழுக்கப்பட்ட நாண் உடையனவாயும் மதங்கொண்ட குரரிப்பேட்டின் கண்டக்கூச்சல்போல் இனியவாயும், சரசமூகங்களை வர்ஷிப்பனவாயுமுள்ள தனுஸுகளின் நாதத்தாலும், காற்றின் வேகத்தினால் தொனிக்கு நுனியை யுடையனவாயும் கடினமான எருமையின் முதுகில் விழுவனவாயுமுள்ள வாள்களின் ஓசையாலும், வேகமாய் கூச்சலிட்டுக்கொண்டு ஓடும் நாய்க ளின் வனாந்தரங்களில் வியாபிக்கும் தொனியாலும், அக்காடெல்லாம் கலக்க முற்றது.

சிறிது நேரத்தில் வேட்டையின் கோலாகலம் அடங்க, மழை பொழிந் து ஓய்ந்தமேகக்கூட்டம்போன்றதா யவ்வனம், கடைந்ததின்பின் தெளிவ டைந்த ஜலத்தையுடைய பால் சமுத்திரம் போலாக, குறைந்த பயத்தையு டையயான் குதூகலமுற்றவனாய்ப் பிதாவின் மடியினின்று சிறிது வெளிக் கிளம்பி பொந்திலிருந்தபடியே தலையை நீட்டி பயத்தினால் தரளமான விழி யுடன் குழந்தைப்பருவத்தினால் இது என்னவென்று பார்க்க விரும்பி அத்தி சையைநோக்கிக் கண்களைச் செலுத்தினேன். அவ் வனாந்தரத்தினின்று எதிர் வருவதாயும் கார்த்தவீரியார்ச்சுனனுடைய ஆயிரம் புயங்களால் தடுக்கப்பட் டுப்பலவாறாய் ஓடிய நர்மதாப்பிரவாகம் போன்றதாயும், காற்றினால் சலிக் கும் தமாலச்சோலை போல்வதாயும், காளராத்திரிகளின் நாழிகைகளெல்லா மொருமித்து வந்தனபோல்வதாயும், பூகம்பத்தினால் ஆட்டங் கொண்ட அஞ்சனக்கற்றாண் சேர்க்கை போல்வதாயும், இரவி கிரணத்தினால் தூரத்தப்

பட்ட காரிருள் போல்வதாயும், சஞ்சரித்து வரும் அந்தக பரிவாரம் போல்வதாயும், கிழியுண்ட இரஸாதலத்தினின்று வெளிவந்த அசுரகணம் போல்வதாயும், ஓரிடத்திற் சேர்ந்த அசுப கர்மங்கள் போல்வதாயும், தண்ட காரண்ய வாசிகளான முனிகணங்கள் எல்லோரும் இட்ட சாபங்கள் சேர்ந்து சஞ்சரிப்பன போல்வதாயும், அனவரதம் நெருக்கமான சரசமூகங்களை வர்ஷித்த இராமனால் கொலையுண்ட கரதூஷணனுடைய சேனாசமுத்திரம் அவரிடத்து பக்தியின்மையாற் பிசாசசென்மத்தை யடைந்தன போல்வதாயும், ஒருமித்துச் சேர்ந்த கலிகால பந்துவர்க்கம் போல்வதாயும், குளிக்கச் செல்லும் காட்டெருமைக் கூட்டம் போல்வதாயும், மலையுச்சியினின்று சிங்கத்தின் கால்களால் இழுபட்டு விழுந்து சிதறிய காளமேகபடலம் போல்வதாயும், வனமிருகங்களனைத்திற்கும் விநாசத்தின் பொருட்டு உண்டான தூமகேதுசாலம் போல்வதாயும், வனத்தை அந்தகாரமாய்ச் செய்வதாயும், அநேகாயிரக்கணக் காடும் உள்ள வேடசேனையை மிகுபயத்தையுண்டாக்குவதால் துர்ச்சகுனத்தைக் காண்பிக்கும் வேதாள சமூகத்தைப் போலும் கண்டேன்.

**ஐந்தா மத்தியாயம் முற்றிற்று.**

கல்யாணராம சாஸ்திரி.

---

## ஆசாரவிளக்கம்.

---

### சூத்திரம். II.

#### அதிகாரி.

(1) நாத்திகராகிய உலோகாயதர் (சாருவாகர்) தெய்வம் ஆன்மா மறுமை கொள்ளாராயினும், இகத்தில் உண்ணல் உடுத்தலாதி தேககசுகங்களும், மகளிர்புணர்ச்சி யாதிபோக சுகங்களுமே மானுடரா லடையத்தக்க சுகங்கள் என்பார். அவர் தஞ்சுகங் கருதி மகளிர் புத்திராதி அந்நியர் சுகங்களைப் பேணலோடு கொலையாதி தீமைகளையும் வெறுப்பர். ஆகலி னன்னோர் உடன்மனச்சுகங்களைப் பயப்பனவாகிய நல்லாகாரம் சுசிநடைகளைக் கைக்கொள்ளப் பின்னிடார்.

(2) அநுபவசாத்திரிகள் தெய்வம் கதிகொள்ளாவிடினும் உடன் மனங்களுக்குச் சுகந்தரும் நல்லாகாரங் கொளலாதி சுசியையும் கள்ளாமை பொய்யாமை முதலிய நன்னெறிகளையும் ஹேது செய்திபலன்களை நுணுகி யோர்ந்து அத்தியாயவசியமெனக் கொள்ளாநிற்பர்.

(3) புத்தர் உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானம் என்னும் பஞ்சகந்தமன்றி ஆகாயம் காலம் திக்கு ஆன்மா தெய்வம் இன்றென்பர். அங்ஙனங் கூறினும்; அருள் அவாவின்மை தவவிருப்பம் மனத்தாலும், இனியவைகூறல் மெய்மைகூறல் பயனுளகூறல் அறமுரைத்தல் வாக்காலும், வணக்கம் ஈகை தவஞ்செயல் காயத்தாலும் செய்யப்படும் புண்ணியம்; தீயனசிந்தித்தல் ஆசை கோபம் மனத்தாலும், கடுஞ்சொல் பொய் பயனில் சொல் கோட்சொல்லல் வாக்காலும், களவு கொலை வீண்செய்கை காயத்தாலும் செய்யப்படும்பாவம், எனப்பாவனுகந்தம் இருபதில் நல்வினை தீவினை கொண்டு தீக்காட்சி தீவாய்மை தீமுயற்சி தீயூற்றம் தீக்கடைப்பிடி தீநெறி தீச்செய்கை தீயுளத்தோர் தலைப்பாடுடைமை கொலை முதலிய தீபொழுக்கங்களை வெறுத்து தேகமனங்களுக்கு விருத்தியும் சுகமுந் தரத்தக்க நல்லாகாராதிகொளல் முதலிய சுகாதார நடைகளை ஆசரிப்பர்.

(4) பாட்டாசாரியர் வேதமன்றித் தெய்வமின்று கன்மமே சகல நன்மையும் பலனும் மோக்கமும் கொடுப்பது என்பாராய் நன்னீரிற் குளித்தல் நல்லாகாரங்கொளல் நல்லிடஞ்சாரல் நன்னெறி கடைபிடித்தல் ஆதிய சதாசாரங்களையும் சோம யாகாதிகளையும் புரிவர். உண்மையிற்கூறி லவர் ஆசாரப்பிர்மவாதிகள் அல்லது ஆசார சம்பன்னர் என்னத் தக்கவராவர்.

(5) சத்தப்பிர்மவாதிகள் சத்தமே உலகம் உயிர் பொருள்களாகப் பரிணமித்திருப்பது அங்ஙனமுணர்வதே முக்தி சுகமென்பாரேனும் தாமும் பிறவும் ஒன்றி னின்றுனமை கருதினும் தமக்குத் தீங்குவிளக்கு மாகாரம் பொருள் ஜெந்துக்களை உண்ணல் அணுகல்செய்யாது தமது தேகமனச் சுகங் கருதுவர்.

(6) ஏகான்மவாதிகள் உண்மையில் பிர்மத்தையன்றி உடல் உயிர் உலகு இன்று. உடல் உயிர் உலகு கானற்சலம்போல இல்லாதன வென்பாரேனும் பொய்யென்னும் விஷம் பாஷாணுதிகளை யுண்ணர். அனல் பாம்பு கிணறுதிகளிடமேகார். பொய்க்கு என்றுவது (விவகார தசையில் இல்லாததும் உண்டு என்று) நன்னீரிற் குளித்தல் நல்லாகாராதி கொளல் நற்சேர்க்கை நல்லவை யெண்ணல் (தீயவையுண்ணல் சாரல் எண்ணல் ஒழிதல்) ஆதிய சதாசாரங்கொண்டு தம்முடல் உயிர்பேணி சத்கருமங்களையும் புரியா நிற்பர்.

(7) பிர்ம்மஞான சங்கத்தார் (Theosophists) பிர்ம்மமொன்றே சைதன்யமாயிருந்து சூக்ஷமமாய் ஸ்தூலமாய் ஜடமாய் தாவரமாய் திரியக்காய் மானிடமாய் விருத்தியடைந்து சித்தராய் முக்தியடையும். பிர்மமாகிய சகல அருவவுருவங்களும் தம்மியல்பில் விருத்தியாய்க்கொண்டிருக்கின்றன வென்பாரேனும் செயற்கையால் தம்முடல் மனுதிகளுக்குத் துன்பம் பயப்பனவாகிய தீப்பொருள் தீச்சேர்க்கை யொழிந்து நல்லாகாரங்கொளலாதி அநு

சரித்துச் செயற்கையாலும் அவைகளின் விருத்தி சுகங்கருதுவர். நன்னெறியு மவ்விருத்திகளுக் கின்றியமையாதன வென்பர்.

(8) ஆருகதர் அருகன்றெய்வம் கன்மங் கதிதரும். உடைதுறந்து பாயு டுத்துத் தலைபறித்து நின்று தந்தது வாங்கியுண்டு மெய்கழுவாது விளக்கி டாது உறங்காதிருப்பது தவம்; எனச் சுகவீனத்திற் கேதுவாகிய அநாசா ரங்களைக் கைக்கொள்வாரேனும் இச்சை கொலை களவு கள் காமம் குரோதம் லோபம் மதம் மாச்சரியம் நீக்குஞ் சீலமும் தானமும் ஆவசிய சற்கருமமாய்க் கொண்டு தமக்குத்துன்பம் இறுதிபயப்பனவாகிய பொருள்களை யுட்கொள் ளல் சாரலாதிய நீங்கி யொழுகுவர்.

(9) கிறித்துவர் பராபரனால் உலகம் இன்மையினின்று சிருட்டிக்கப் பட்டது. கடவுள் உடலைச்செய்து தன்ஜீவ சுவாசத்தை ஊதி உயிர் (ஆன்மா) ஆக்கினார். அவ்வாதிபிதாவினின்றும் பிரஜா விருத்தியாகிய உயி ரும் உடலும் விருத்திபாய் வருகின்றன. ஆதிப்பிதாவின் பாவத்தால் அது செய்யாத ஜீவரெல்லாம் பாவிகளானார். புண்ணியமும் அதனால் சுவர்க் கமுமின்று. எத்துணை புண்ணியஞ் செய்யினும் கிறித்துவை நம்பார் நரகத் தையும், கிறித்துவை நம்பினோர் எல்லாப்பாவமும் மன்னிக்கப் பெற்று சுவர்க்கத்தையும் அடைவர். திரியக்காதி ஜெந்துக்களுக்கு பகுத்தறிகிற ஆன்மா இன்று. மனிதனின் பொருட்டாக்கப்பட்டனவாகலி னவைகளைக் கொன்றுதின்னலாம் என்பாரேனும் மனிதக் கொலைசெய்யாமை தன்னைப் போல் பிறரைநேசித்தல் பிறனில்விழையாமை கள்ளாமை பொய்யாமை முத லிய நன்னடக்கைகளைத் தமது கடமையெனக் கொள்வதோடு உடன்மனச்சு கங்களுக் கவசியமான நல் லாகாரங்கொளல் நல்லிடஞ்சாரல் நல்லுடை தரித்தல் நல்வாயுச் சுவாசித்தல் முதலிய சுசியாசாரங்களையுங் கைக்கொண் டொழுகுவர்.

(10) கிறித்துவரிற் கத்தோலிக் மதத்தர் புரோடஸ்டாண்ட் கொள் கையோடு பலவொன்றுபட்டு முன்னோர் பின்னோர் பாவங்களுக்காகத் தேவ குமாரன் தண்டனை யடைந்தனர். பாவஞ்செய்தார் உண்மையைத் தங் குருவிடம் மனஸ்தாபப்பட்டுக் கூறில் மன்னிக்கப்படுவர். போப்பு வின் அருட்சீட்டுப் பெறில் இறந்தோர் துறக்கம் புகுவர் என மெய்மை குரு பக்திகளை விளக்கும் ஆசாரங்களோடு புரோடஸ்ட்டாண்டாரினும் சுசி யாசாரங்களைப் பெரிதும் வேண்டுவர்.

(12) முகம்மதியர் அல்லா (கடவுள்) தன்னூறினின்றும் (நூறு=ஒளி) முகம்மது நபியை மயில் முதலிய பல ரூபங்களாகப் படைத்துப் பின்னர் அவரொளியினின்றும் உலகெலாம் படைத்தார். அந்நபியிடம் ஈமான் (பக்தி) கொண்டா லன்றிச் சுவர்க்கம்புகார். ஜீவர் நால் வகுப்பினர். அவர் தந்தந் தன்மைப்படி யொழுகிப் பலன் அடைவர். படைப்பெல்லா மனிதர்க்காக

4

வேயாம். திரியக்காதி ஜந்துக்கள் ஆன்மாவற்றன; அவைகளைக் கொன்று தின்னலாம்; என்று ஊன் தின்பார் எச்சிலை வெறுகாரேனும் கான்முகங் கழுவல் குளித்தல் நல்லாகாராதி கொளல் முதலிய சுசிகளையும் பொய்யாமை முதலிய நன்னெறிகளையும் தருமம் முதலிய புண்ணியங்களையும் கைக் கொள்வர்.

(13) யூதர் கிறித்துவ மதத்தின் பழைய ஏற்பாட்டைப் பெரும்பாலு மொப்பியவர். சிலசுசி பல நெறிகளை விரும்புவர்.

(14) பார்சியர் அக்கினியை வணங்குவர். சிற்சில சுசிகளையும் பலநெறிகளையும் சுகாதாரங்களையுங் கைக்கொள்வர்.

(15) பாஞ்சாராத்திரர், விண்டு அரூபர், அவர் மாயைஜீவர் மாயாகாரியமாக ஆனர். சுயேச்சையால் பிரபஞ்சரக்ஷணார்த்தம் அவதாரங்களாகிய பிறப்பையடைவர். ஆநந்தமும் அணுரூபமுமுடையது ஆன்மா அதுவிண்டு வருளால் விரஜைநதியாற் கழுவப் பட்டுமாயை நீங்கும்.

(16) வைகானசர், உயிர் நக்ஷத்திரம் போன்றது. அதனைக் களங்க மறைக்கும். அக்களங்கம் (மாயாதேசம்) போய் திவ்யதேக மடையும் பொருட்டு விண்டுவை அர்ச்சாவிக்கிரகங்களில் சேவித்துப் பூசிக்கவேண்டும்.

(17) வைணவர் (மாத்வர்) விண்டு வைகுண்டத்துருவத் தோடிருக்கிறார். சூரியன் கிரணம்போல ஜீவர்களி னுள்ளங்களில் வியாபிக்கிறார். ஜீவன் சுகரூபி. அஞ்ஞானத்தால் பந்தனுகிறான். அது நீங்கினால் விண்டுகதி யடைவன். கதியில் இங்குள்ள சரீரரூபங்களோடு ஜீவரிருப்பர்.

(18) சுத்த சைவர் அசுத்த சைவர் மிச்சிர சைவர் சித்தாந்த சைவர் அநாதி சைவர் அவாந்தர சைவர் பேதசைவர் அநுசைவர் ஆதிசைவர் ஒருவருக்கொருவர் மாறுபட்ட அபிப்பிராயங்களை யுடையவர்.

இங்ஙனங்கூறிய சைவவைஷ்ணவர் ஒருவர்க்கொருவர் தேவதோபாசனுவிஷயத்தில் வெவ்வேறு கொள்கைகளை யுடையரேனும், சௌசம் ஸ்நாநம் நல்லாகாரங்கொளல் நல்லிடஞ் சாரல் முதலிய சுசிகளையும் பொய்யாமை கொல்லாமை கள்ளாமை முதலிய நன்னெறிகளையும் இகபரங்களுக் கவசியமான சதாசாரங்களாகக் கொண்டொழுகா நிற்பர்.

இன்னும்வரும்.

விருதை. சிவஞானம்.

---

# பர்த்ருஹரி.

---

## 1. நீதிப்பால்.

### 5. கீழோர் நெறி.

தீயோர்தன்மை இனைத்தென்று ஆராயப் புகுங்கால், ஒருயிர்க்குத்
துயர் நேர்ந்த விடத்து அதனை யொழிக்கப் பரிவு கொள்ளாதிருத்தலும்,
காரண மின்றி ஓநாய் ஆட்டைப் பாய்ந்தழித்தது போலக் கோழிப் பகை
கொண்டு நல்லோரைப் பகைத்துப் போரியற்றப் புகுதலும், பிறர் பொருள்
தாரங்களை விடமெனக் கருதாது விட்டிற்பறவை விளக்கைக் கனியெனக்
கருதுமா போல் தனக்கு இன்பந்தருவன வென்று அவற்றின் மேல் விருப்
பங் கொள்ளுதலும், நல்லோரிடத்தும் சுற்றத்தாரிடத்தும் செல்வங் கண்
டுழி மகிழ்ந்து மனத்தின்கண் நிறைவு கொள்ளலை யொழித்து "அயல் வாழ்ந்
தால் ஐந்து பட்டினி" என்பதாக அழுக்காறு கொள்ளுதலும், ஆகிய இவை
யே அக்கீழோர்க்குப் பிறப்பிலமைந்த முக்கிய குணங்களாம். இத்தகைய
தீக்குண முடையான் ஒருவன் பல நூல்கள் கற்று வல்லானாயினும் அவனை
விலக்கி வாழ வேண்டும். அவன் கலைவலா னென்று அவனுடன் கலக்க
வொண்ணாது. மணியுடைய தென்று பணியொடு பழகலாமோ? "பாம்
பென்றாற் படையுங் கலங்குமன்றோ?" "துஷ்டனைக் கண்டால் தூர விலகு"
எனவும் சொல்லப்படுகின்றதே. அன்றியும் பிறரிடத்தில் குற்றங் காண்ப
தே அவனுக்குத் தொழில். வெட்க முடையா னொருவனை, இவன் ஏதோ கால
பேதத்தால் தகாதகாரியத்தைச் செய்ததால் வெட்கியிருக்கின்றா னென்று
எண்ணாமல், மூடனென்கின்றான். சாந்திராயண முதலிய விரதங்காத்து நெறிப்
பட்டா னொருவனை இவன் நோன்பு கொண்டு நல்லொழுக்கத்தி னிற்பானென்
றுன்னாதே, இடம்பனென்று இயம்பிக்களிக்கின்றான். உள்ளும் புறமுமொத்த
தூய்மை யுடையானொருவனை உண்மையில் தூயனே யென்றுணராமே, இவன்
குழைத்திடுகள்ளன் மாயவேடத்தான் என்று இகழ்ச்சி செய்கின்றான். சூர
னான ஒருவனை பராக்கிரம சாலியென்று கொள்ளாது, இவன் இரக்கமின்றி
உயிர்க்கொலைபுரிவோன் என்று கொடுமை கூறுகின்றான். மௌன நிலையிலு
ள்ள முனிவரை ஆன்ம தத்துவமறிந்த பெரியோரென்றறியாமல், இவர் மூட
ரெனச்சிறுமைசெய்கின்றான். மென்மையாய் அகங்கனியப் பேசுமொருவனை,
எல்லார்க்கும் நயம்வரச் செவிக்கினிய செஞ்சொல்லைப்பேசும் நல்லோனென
மதியாமே, இவன் அழுகள்ள னென்று அவமதிக்கின்றான். சிறிது பெருமை
யான தோற்றமுடைய வொருவனை, இந்தக்கெம்பீர மானதோற்றம் இவனுக்கி
யல்பாயமைந்ததென்று கொள்ளாமல், இவ்வன் வீண் செருக்குடையா னெனச்
சிந்தையுட் கொண்டு நிந்திக்கின்றான். தான் எடுத்த தொன்றினை விளக்க

முறப் பேசுந்திறமை யமைந்த வொருவனை, பல்ரும்வியக்கு மொழித்திற மமைந்த நாவல னென்று நினையாது, இவன் பயனற்ற சங்கதிகளில் வெற்றெனச் சொற்றொடுக்கும் வீணனென்று கூறிக்குலைகின்றான். ஆதலால் மேலோரிடத்தில் கீழோரால் இகழப்படாத நற்குணமேது ?. ஒருவரிடத்து நற்குணங்களிருப்பினும் அவற்றைவிட்டுத் தீக்குணம் தேடுவதே இவரது தொழில். இவருக்கும் வேப்பம் பழத்தையும் பிணத்தையுமே விரும்பும் காக்கைக்கும் யாதுவேற்றுமை? இப்படி மேன்மக்களிடத்துக் குற்றம் ஆராயும் இயல்புடைய பேதை தன் தீக்குணங்களாலேயே கேடுறுவான், தீயகுணங்கள் தீமைக்கு மூலமல்லவோ ?

பகலில் ஒளியிழந்த சந்திரனும், யௌவனம் கழிந்த ஸ்திரீயும், தாமரையில்லாத ஓடையும், கல்வி யறிவில்லான் வனப்பும், பொருளாசையுள்ள பிரபுவும், யோக்கியனுக்கு வந்த வறுமையும், அரசனை அண்டைகொண்ட கீழ்மகனும் துன்பத்துக்கேது என்னுமாறு, இழிதகவுடையோன் வேந்தன் சார்பில் தங்கியிருப்பனேல் அவனது கொடுமையை வெளிப்படுத்தக்கூடாமையால் அஃது எவர்க்கும் துயர்க்கிடனாகின்றது. அத்தகைய தீயவனுக்கு அரண் கொடுத்த கோமகன் கோபத்தைக் குடிகள் அஞ்சுகின்றனர். கடுஞ்சினமுடைய மன்னவனுக்குத் தன்னவனென்றும் பிறனென்று முண்டோ? நெருப்புத் தன்னவனென்றும் பிறனென்றும் பார்க்குமோ? தனக்கு ஆகுதி முதலியவற்றால் திர்ப்திசெய்து உபசரிக்கும் கர்த்தாவையும் அத்தீ தகிக்குமன்றோ ? ஆனதுபற்றி அவ்வேந்தனை அடுத்து வாழ்வது அவலமே. பின்னும் அவன், தன்னை யடுத்துள்ள ஒருவன் அடங்கி மௌனமாயிருப்பின் அவனை ஊமையென்கின்றான். மொழித்திற முடையனானால் பயனில சொல்லும் வாய்ப்பதட்ட முடையான் என்கின்றான். அரசனுக்கு எந்தவேளையில் என்ன அபேக்ஷையுண்டாகுமோ வென அருகிலிருந்தால் பயமற்றவன் என்கின்றான். தொலைவிலிருந்தால் அவனைக் கண்ணோக்குவதேயில்லை. பொறுமையுள்ளவனாயிருந்தால் தைரியமில்லாதவன் இவன் உபயோகியல்லன் என்கின்றான். தன் சீற்றத்தையும் கடுஞ்சொல்லையும், பொறானாயின், இவன் அற்பன், இழிகுலத்தானாகலின் தனக்கியல்பான இழிகுணத்தைக் காட்டுகிறான் என்கின்றான். ஆதலால், சொல்லவும் கருதவுமோ ரெல்லையிலடங்காத மெய்ப்பொருளைத் தமது யோகசித்தியால் அறியவல்ல முக்காலமுணர்ந்த முனிவர்க்கும் இப்படிப்பட்ட கொடியமன்னனை அடுப்பது அசாத்தியம். எவன்தான் இத்தீயவனையடுத்து நலம்பெற்றவன் ? தன் காவலால் தீயோரைச் செழிக்கச்செய்து, நல்லோரைப்பகைத்து, விதிவிலக்குக்களை கடந்தொழுகித் தீச்செயலே மிகுந்துள்ள ஒரு கீழ்மகனுக்கு அதிர்ஷ்டவசத்தால் பெருஞ்செல்வங் கிடைத்திருப்பினும் அதனால் ஒருவர்க்கும் பயனில்லை. அவனைத்துணையாகப் பற்றுவதும் அம்மிதுணையாக ஆறிழிந்தவாறொக்கும். அவனோடு குணவான்களுக்கு எங்ஙனம்நட்புப்

பொருந்தும்? "நளிகடற் றண்சேர்ப்ப நாணிழற் போல - விளியுஞ் சிறியவர் கேண்மை - விளிவின்றி - யல்கு நிழற்போ லகன்றகன் றோடுமே - தொல்புக ழாளர் தொடர்பு" என்றவாறு நல்லோர் நட்பு நடுப்பகல் நீங்கி நாழிகையேறயேற நிழல் நீளுவதுபோல நாளுக்குநாள் நலங்கொண்டு வளரும். தீயோர் சிநேகம் காலையிற்றோன்றும் நிழல் முதல்நீண்டு அப்பால் வரவரக் குறுகுவதுபோல, தொடக்கத்தில் மிகுதியாகத் தோன்றிப் பிறகு நாள் செல்லச்செல்லக் குறைந்துவரும். கீழோர், மேலோரது நட்புக்குரியரல்லராயினும் அவரோடு பகை கொள்ளாதிருக்கலா மன்றோ? அவ்வாறின்றிக் காரணமில்லாமலே அவர்க்குப் பகையாகின்றனர், புல்லையும் புனலையுங்கொண்டு பிழைக்கு மான் மீன்களுக்கு வேட னும் செம்படவனும் ஏதுவில்லாமலே பகையாகின்றன் ரன்றோ? ஆகலால், எப்போதும் உயர்ந்தோர்க்குத் தீமையிழைப்பதே இழிந்தோரியல்பாம. இதனை அடியில்வரும் சிறுகதையால் அறியலாம்:—

ஒருகுன்றினின் றிழிந்துவரும் சிற்றாற்றின்றலைப்பில் நீர்பருகிக்கொண்டிருந்த ஓநாயொன்று அந்நீரோட்டத்தின் கீழ்ப்புறத்துத் தண்ணீர்குடித்துநின்ற ஓராட்டுக்குட்டியைக்கண்டு அதனைக்கொன்று தின்னக்கருதி அதனைநோக்கி, அடா, "துஷ்டா! யான்பருகும் நீரினைக்கலக்கும் நினது துணிவென்னே!" என்ன, அதற்கு ஆட்டுக்குட்டி "ஐயனே! இவ்வருவி நுமதிடத்தினின்று என்பால் வராநிற்க நீர் பருகும் நீரை யான்கலக்கினேன் என்பது யாங்ஙனங் கூடும் என்று பணிந்துகூற, ஓநாய் "இதுநிற்க, ஓராண்டுமுன்னர் என்னை நீ இகழ்ந்தாயல்லையோ"? என்றுசீற, அச்சிற்றுடு "சுவாமி! அடியேன்பிறந்து இன்னும் ஆறுதிங்களாகவில்லையே! அங்ஙனமாகத் தங்களை யோராண்டுமுன்னர் இகழ்ந்தேனென்றுரைப்பது வியப்பே" என்று இரங்கிக்கூறலும், அக்கொடிய ஓநாய் பிறிதேது முரையாடாது அதன்மேற்பாய்ந்து அதனைக்கொன்று தின்றது.

கா. கோபாலாசாரியர்.

---

## "விவேகசாகரர்"

### அல்லது "மதியின்மகத்துவம்."

### 1-வது அதிகாரம்.

ஈழமண்டல முதலென வுலகத் தெண்ணு மண்டலத் தெறிபடைவேந்தர்
தாழுமண்டலஞ் செம்பியன்மரபினோர்தா மெலாம் பிறந் தினிய பல்வளத்தின்
வாழுமண்டலங் கனகமு மணிகளும் வரம்பில் காவிரி குரம்பினிற்கொழிக்குஞ்
சோழமண்டல மிதற்கிணை யாமெனச் சொல்லு மண்டலஞ் சொல்வதற் கில்லையே."

என்று ஆன்றோரால் புகழப்பெற்ற சோழ மண்டலத்தின் கண்ணுள்ள காவிரி நதிக்கரையினிடமாகத் 'திரிசிரபுரம்' என்றோர் புரியுள்ளது. சின்னாட்கு முன்னர் அப்புரியில் நவாபு ஒருவர் அரசு புரிந்து வாழுங்கால் 'விவேகசாகரர்' என்றோர் வேளாளனிருந்தார். அவருடைய வெள்ளிய வுரோமஞ்செறிந்த சிரசையும், சிறிய நுதலையும், குழிந்த கண்களையும், குண்டலச் செவிகளையும், கோரதந்தங்களையும், தடித்த வதரத்தையும், குகைபோன்ற வாயையும், திரை படர்ந்த முகத்தையும், கொக்குக் கழுத்தையும், மயிரடர்ந்த கை கால்களையும், தாழி வயிற்றையும், காரினுங் கரிய கந்தலாடையையும், கையிற்பிடித்த கோலினையும், காலிலணிந்த வாலுளச் செருப்புகளையும், கரிய மேனியையும் அவரையறியா வொருவர் ஆராய்ந்து நோக்கின், இவ்வுருவம் 'கங்கு பூசிவருகின்ற கலிகாலமோ' தெய்வமோ, மானுடமோ, பிசாசமோ வென்று மிகவு மையுறுவர். ஒருக்கால் இவரை மானுடரென்று தெளிந்து விடினும், இவர் கோலத்தை நோக்குங்கால் இவரை மதியீன ரென்றும், ஏழை என்றும் பல்விதமாகப் பகரவுங்கூடும். ஆயினும், உண்மையில், அவர் அப்படியல்லர். அவர் உழுங்குலமாகிய வேளாண் குலத்துதித்து, குலத்தொழிலாகிய உழுதல், பயிரிடல் முதலிய விபசாயம் செய்து, தன் விடா முயற்சியால் பொருள் முதலிய சம்பாதனஞ் செய்து, தானே விவாகம் செய்து கொண்டு இல்லறம் வழுவாது இனிது நடத்திப் பின்னர் தானீட்டிய பொருள்கள் யில்லாளிடம் ஒப்புவித்து விட்டு தத்துவ ஞானமும், மலபரிபாகமு மெய்தி யிக்கோலங் கொண்டனர்.

இவர், உண்மையறிவு பெற்றவுடன் தான் வாழுமூர்க்கு அரசனாகிய நவாபுவினிடம் சென்று தன்னறிவின் மயத்தைக் காட்டி, அந்நவாபுக்கு நல்லறிவும் நற்கதியும் நாடி யளித்ததையே இக்கதையிற் சொல்லப்படும்.

ஒரு நாள் நவாபு தமது பரிவாரங்களுடன் சொலு மண்டபத்தில் வீற்றிருந்து தம்குடிகளின் யோக க்ஷேமங்களை விசாரித்துக் கொண்டிருக்குங் காலத்தில், 'விவேக சாகரர்' தன் விகார ரூபத்துடனே திடீரென வுத்தரவின்றி யுட்புகுந்து நவாபின் முன்னர் வந்து நின்றார். வந்தவர் வழக்கப்படி நவாபுக்கு மரியாதை செய்யாமை கண்டு சபையோருட் சிலர் இவரை அடித்துத் துன்பம் செய்ய வெழுந்ததை நவாபு அறிந்து, அவர்களைக் கை காட்டி யமர்த்தி விட்டு, இவ்விகார ரூபம் சாதாரணமாய் மானுடர்களால் பெறக்கூடாத சிற்சில மகத்துவங்கள் பெற்றிருக்கவே வேண்டு மென மனத்திலூகித்துக் கொண்டு, அவரை நோக்கி "நீ யார்? உமக்கு எந்தவூர்? எப்பொழுது பிறந்தீர்?" என்று திடீரென வினவினர். அதற்கு அவர், "என் பெயர் விவேகசாகரன் என்பர். இவ்வுலகமே என்னூர், நா னிப்புவியி லுதிக்குமாறு என் மாதா நினைத்தது எப்பொழுதோ வப்பொழுது தான் நானும் பிறந்தேன்" என்று கூறவும், அக்காலத்து வழக்கப்படி நவாபு கீழ் வருமாறு கேள்விக ளிடலாயினர்.

நவாபு:—உமக்கு மாதா, பிதா, சகோதரர்களுண்டா?

விவேக:—எனக்கு மாதா, பிதா, சகோதரர்களிருக்கிறார்கள். ஆனால் அவர்களெல்லோரும் இப்பொழுது இறந்து விட்டார்கள்.

நவாபு:—இறந்து விட்டால், அவர்களிருக்கிறதாக எங்ஙன முரைத்தீர்?

விவேக:—நான் வீட்டிலிருந்து வரும் பொழுது அவர்களெல்லாரும் நித்திரை செய்து கொண்டிருந்தனர். நித்திரைக்கும் மரணத்துக்கும் கொஞ்சமே வித்தியாச மாதலானும், நித்திரை மரணத்துக்குச் சகோதர மாதலானும், நான் அவர்கள் இறந்ததாகச் சொன்னேன்.

நவாபு இவர் மிகவும் விகடஸ்தன் போலு மென்றறிந்துகொண்டு கீழ்வரும் பல கேள்விகளைக் கேட்கலாயினர்.

நவாபு:—மிகவும் வேகமாயோடுவ தெது?

விவேக:—மனோபவம்.

நவாபு:—என்றும் நிறையாத குடா மெது?

விவேக:—கஞ்சனுடைய அர்த்தாபேட்சை.

நவாபு:—வாலிபனிடத்தில் விரும்பப்படாதெது?

விவேக:—கீழ்ப்படியாமை.

நவாபு:—அவனிடம் நகத்தக்கதெது?

விவேக:—ஆணவம், அதாவது தானெனுமகங்காரம்.

நவாபு:—முதிர்ச்சியில் நகத்தக்கதெது?

விவேக:—பெண்ணாசை.

நவாபு:—வியாபாரியிடத்தில் இருக்ககூடாத குற்றமெது?

விவேக:—பொய்யுரைத்தல்.

நவாபு:—அகத்திலபாயம் விளைவிப்பவர் யாவர்?

விவேக:—கற்பில்லாத மனைவியும், அவதூறுகூறும் வேலைக்காரனும்.

நவாபு:—குணத்துக்குவராதநோய்களெவை?

விவேக:—பயித்தியமும், கடனும்.

நவாபு:—தன்தாயின்நாவினைச்சுடும் பிள்ளையெது?

விவேக:—மெழுகுதிரி.

நவாபு:—கணவனுக்குத் தீராதவியாதி யெது?

விவேக:—தன் மனையாளினுண்மையின்மை.

நவாபு:—ஆஹா! உமது மூளையே மூளை.

விவேக:—ஆஹா! உமது அழகே யழகு—என்று துணிவுடன் பரிகாசமாய்க் கூறிவிட்டு சமஸ்தானத்தில் நிற்கவும், நவாபு

சொஞ்ச நேரம் தனது பிரதான மந்திரியினிடம், இவருக்கு என்ன பரிசு கொடுக்கலா மென்று யோசிக்கலாயினர்.

(இன்னும்வரும்.)

தே. ச. ஆண்டியப்ப பிள்ளை.

---

## தோத்திரவெண்பா. *

### காப்பு

மாபா ரதமெழுத மாலுறுநற் கொம்புநனி
யேவா தொடித்தருளு மேரம்ப—பூபாரம்
பேசுவள மும்வேதப் பேரொலியும் மல்குந்தென்
காசிவெளேப் பாவுரைக்கக் கா.

1. சீரார் வளப்பொலிவுஞ் சில்வண் டினச்செறிவுங்
காவார்ந் தெழில்பொழியுங் காசியே—தேரார்
திரிபுரத்தைச் சங்கரித்துத் தேடவருஞ் சொர்க்கத்
தொருபதத்தி லுய்த்திடுவா ரூர்.

2. கார்கடல் மன்னருந்திக் காத்தளிக்குங் கும்பமுனி
யார்வமோ டர்ச்சித்த காசியே—தேர்கொடுவா
பிர்மப்பா காவென்றூர் பித்தா வெனவழைக்கத்
தர்மப்பா காவென்றூர் காப்பு.

3. தேவமறை யாகமங்கள் தெய்வபலா வென்றுதொழும்
பாவமறு கற்பகத்தென் காசியே—மூவுலகும்
முன்புணர்வார் நீணிலத்தில் முன்னப்பர் தான்றுதிக்க
அன்புணர்வா ரத்தர்தன் னூர்வு.

4. தோன்றுநர்க்கு முத்திதரும் தொல்புகழ்க் குற்றாலங்
கான்றுருக்கு னீர்மல்குங் காசியே—ஆன்றமயிற்
புள்ளே றிவருவார் போதமழ லைக்குவந்தார்
வெள்ளே றிவருவார் வீடு.

5. கோட்புரியு நாரதர்தன் கோட்டான் குணமொழித்
தாட்பெறுநல் லன்புற்ற காசியே—கோட்டிப

---

* தென்காசி நகர்க்கண் கோயில் கொண்டருளிய ஸ்ரீ காசிவிசுவேசர்மேரிற் பாடியது.

மூர்ந்தருள் வாசவனும் மூரியெழு நாவுமன்பு
கூர்ந்துதொழப் பட்டார் குடி.

6. வாசவன்றன் வச்சிரத்தை வன்முனையாய்ப் பெற்றிடவே
யாசையோ டர்ச்சித்த காசியே—பாசமறு
வெம்மறலி நற்பாதத் தானடித்தார் வெம்பழியின்
செம்மறனைக் காத்தளித்தார் சேர்வு.

7. பண்டு விசுவேசர் பார்புகழும் பொன்வழுதி
கண்டுகொளக் காட்சியருள் காசியே—வண்டுளவோன்
நத்தன் புருகூதன் நாடிமிகப் போற்றுபத
வத்தன் னரனின்றன் னூர்வு.

8. கானமாஞ் செண்பகத்தின் காழசுரன் கொல்லுதவிக்
கானமாண் டுர்க்கைசூழ் காசியே—கானவான்
கண்ணப்ப னெச்சில் கனிந்தே களித்துண்டா
ரெண்ணப் பவமறுத்தா ரில்.

9. வானுச்சி மைனகம் வாள்சிறகு காத்திடுவான்
தானிச்சித் தர்ச்சித்த காசியே—தேனிச்சுங்
கேதகைத்தா மங்களித்தார் கேடிகழ்நல் லைம்முகத்தார்
மாதொருபா கத்தார் மனை.

10. ஆர்க்க சதுர்மறை யந்தணர்க ளெல்லவருங்
காக்க கடிநகர்த்தென் காசியே—ஊர்க்கு
மாதமும் மாரி மலிகுகநல் லாடவரும்
மாதருந்தங் கற்புமா ண.—ஆ.

[இப்பாடல்களை யாக்கியோர் எதுகைத்தொடை நயத்தைப் பெரிதுங் கவனித்தாங்கு மோனைத் தொடை நயத்தையும் அத்துணை கவனியாது விடுத்தமை மிகவும் பரிதபிக்கத்தக்கதே.—பூ]

---

## ஒத்த சமயம்.

### பேகனாது 3 - ம் சிற்றுரை.

---

**ஒத்த சமயம்,** அதாவது நாடு அடங்கலும் ஓரேசமய நெறியைத் தழுவி நடத்தல்.

மக்கள் கட்டுப்படுதற்கு முக்கிய காரணம் ஒத்தசமய நெறியாதலின், சமயநெறியே யோக்கியமான ஒற்றுமைக்கு அடங்கிப்போந்தால் எவ்வளவோ பாக்கியமாம். கிறித்தவர் அல்லாதார்களிடத்திற் சமய நெறியைப்பற்றிய பிரிவும் சச்சரவும் கிடையா; ஏனென்றால் ஆதியில் வெறுங்கவிகளாய் மாத்தி

ரம் பேர்பெற்றவரே அன்னூரால் சமயகுரவர்களாகக் கொண்டாடப்பட்டு வருகின்றமையால் அன்னோர் சமயநெறி எப்படிப்பட்டதென விளங்குவதனால் அன்னோர் சமய நெறிகளிற் சடங்குகளுந் தந்திரங்களும் ஜாஸ்திப்பட்டும் மந்திரங்களமைந்த ஸ்திரமான கொள்கைகள் சம்மிப்பட்டும் வழங்கும். கிறித்தவச்சமயக் கடவுள் கடுக்கும் தெய்வமென உரைபெறுதலால், அவரை வழிபடும் சமயத்திற் கலப்பும் பிரிவும் ஆகாததாம். **சமய நெறியில் ஒற்றுமை யாவதென்ன? அதனுற் கூடுதல் என்ன? எம்மட்டும் ஒற்றுமை இயலும், அதற்கு உபாயம்யாது?** எனக்கொஞ்சம் விவரிக்கப் பார்ப்போம்.

**சமயநெறி யோற்றுமையாற் கூடுதல் என்ன?** கடவுளுக்கு உவப்பு இருப்பது இருக்கட்டும். சமயநெறிக்கு வெளிப்பட்டார் விஷயத்தில் ஒற்றுமையாற் கூடுதலும், அதற்கு அடங்கிய உட்பட்டார் விஷயத்தில் ஒற்றுமையாற் கூடுதலும் என இரு பிரிவுபடும்.

I. **சமயநெறிக்கு வெளிப்பட்டார் விஷயத்திற் ஒற்றுமையால் கூடுதலாவது.** ஒழுக்கம் சிதைவதிற்கூட அவ்வளவுகேடு இல்லை எனலாம், சமயநெறியிற் பிளவுகளையும் கட்சிகளையும்போல நாட்டுக்கு எதுவும் அவ்வளவு சேதமாகாது. பாருங்கள், உடம்பில் இரத்தம்கெட்டு, எந்தஉறுப்பாவது அழுகிச் சிதைவதிற்கூட அவ்வளவுசேதமில்லை. உடம்பிற் பிளப்பு உண்டாவதிற் சேதம்ஜாஸ்தி. சமயநெறியைவிட்டு மக்களைவிலகச்செய்து அவர்கள் அணுகாதிருக்கக் காரணமாய் ஏற்பட, சமயநெறிப்பிளவைவிட வலியதுயாது? "ஆண்டவன் வெளியில் உளன்" என ஒரு சாரார் கூற, "பார், மரும ஸ்தலங்களில் ஆண்டவன் உளன்" என மற்றொருசாரார் கூற, அதாவது புறம்பானவர் அவயத்து ஸ்ரீ கிறித்து பிரகாசிக்கிறார் எனவும்,. ஆலய வமைப்பில் பிரகாசிக்கிறார் எனவும் பலர் பலவாறு உரைப்ப, "வெளிப்படாதே" "வெளிப்படாதே" என ஆண்டவன் இடை விடாது காதில் ஓதியதற்கு நியாயமிருந்தது. புறச்சமயத்தவரைத் திருத்துவதை ஏற்ற ஸேண்ட் பால் குரு, அன்னோர் க்ஷேமத்துக்கு முயன்ற அவர் "புறத்தவர் உள்ளே வந்து, நாம் பலவாறு பிரிந்து பேசக் கேட்டால் நம்மைப் பயித்தியக்காரர் என்னுரா" என்றார். நாஸ்திகரும், ஈன ஒழுக்கத்தினரும் சமய நெறியில் இத்தனை பிளப்புக்கள் இருக்கக் கண்டு சமய நெறியினின்று விலகிச் சமய நெறியைத் தூற்றுவர். இகழ் உரையிற் கைகாரரான ராபிலே கற்பனை செய்து புஸ்தகசாலை ஒன்றில் உள்ள புஸ்தகங்களுக்கு ஜாபிதா தாம் எழுதினது போலும், அதனிற் 'சமய நெறியை இகழ்வார் பேய்க்கூத்து' எனப்புத்தகம் ஒன்று இருப்பது போலும் சொல்லியிருக்கும் இழிமொழியை இங்கு உதகரித்தல் தகாதெனினும், சமய நெறியை இகழ்வார் நடவடிக்கை அவ்வாறு உதகரித்தால் தான் விளங்கும்படியுள்ளது. சமய நெறியிற் கக்ஷிப்பட்டார் பேய்க்கூத்தே ஆடுகிறார்கள். எவ்

வளவோ விகாரமாய் ஆடுவர், அவ்வாறு ஆடுவதைப் பார்த்து அற்பப் புத்தியரும் இம்மை வாழ்வு நோக்கத்தினரும் அசைந்துபோய்ப் பக்திமார்க்கத்தையவமதிப்பர்.

II. **சமயநெறிக்கு உட்பட்டவர் விஷயத்தில் ஒற்றுமையாற் கூடுதலாவது:**—சச்சரவு நீங்கிய அமைதியாற் கணக்கில்லா லாபம் உண்டு. சச்சரவில்லாத அமைதியாற் சமய நெறியில் விசுவாசம் கெட்டிப்படும், அப்புறம் அன்பு தோன்றும், அறிவு கலங்காது பகுத்தறிவு விரிவுபெறும், உழைத்துப்போராடிப் பிரபந்தங்கள் எழுதிக் கக்ஷியாடுவது நின்று, நெஞ்சடக்கம், ஒழிவு, அன்பு இப்புண்ணிய காரியங்கள் வளர்ச்சி பெறும்.

III. **சமயநெறியில் ஒற்றுமை எம்மட்டும் இயலும்:**—எம்மட்டும் இயலும் எனல் முக்கிய சங்கதியாம். இச்சங்கதியில் இருவழியும் பிழைபடச் செல்ல இடம் உண்டு. "ஜெஹூ, இராஜியா, நீஏன் இராஜிக்குப்போகிறாய், இந்தண்டைவா, எனக்குப் பின்னிடை". இராஜி எங்கே வந்தது, ஒருவர் வழிகாட்டி முன்செல்ல மற்றையர் எல்லாம் பேசாது வழிபடவேண்டும் என்பர் ஒருசாரர். இத்தரத்தார்க்குச் சமய நெறியில் வேறுபட்டார் பேரில் துவேஷம் ஜாஸ்தி. இராஜிப்பேச்சைக்கேட்டாற் கடுங்கோபந்தான். உலக விவகாரங்களிற் கட்சிப்பட்டார் விவாதச்சங்கதிகளிற் சில அம்சங்களை மற்றைக்கட்சிப்படியும் எடுத்துச் சாமர்த்தியமாய்ப் பிணைத்து ஒருக்கி மத்தியஸ்தம் செய்கிறோமே, அப்படியே சமய நெறியிலும் புணர்த்தக்கூடும் போல, லோடிஷியர்முதலிய மெலிந்த நெஞ்சினர், புணர்க்கப்பார்ப்பர். கடவுளுக்கும் மனிதர்க்கும் மத்தியஸ்தம் செய்ய இறங்குவர். இவ்விருவழி மீச்செலவும் ஏலாது. "நம்முடன் பொருந்தாதார் நமக்கு எதிரியே, நம்மையெதிராதார் நம்முடன் பொருந்திபவரே" என முடுகாரய கிறித்தவர் இணங்கும் பொருட்டு ஆண்டவர் இட்ட இரண்டு ஆணையையும் நற்சிந்தையுடன் உராய்க்கப்பெறின், அதாவது சமயநெறியில் இன்னின்ன அம்சங்கள் மூலக்கொள்கைகளைப் பற்றியன, முக்கியமான சங்கதிகளாவன எனவும் மற்றைப்படி மூலக்கொள்கைகளைப் பற்றாமல் ஆளுக்கு ஆள் வேறுபடும் அபிப்பிராய வித்தியாசத்தாலும், ஒழுங்கின் நிமித்தமாகவும் நற்சிந்தையாலும் இன்னின்ன அம்சங்கள் நேரிட்டன எனப் பகுத்தறியப்பெறின், கிறிஸ்து நியமித்த ஒற்றுமை நிகழ்வுறும். நான் சரியாய்ப் பகுத்தறியவேண்டும். சங்கதிகள் என்பன அற்பம் போலும், ஏற்கனவே முடிவு பெற்றுப்போன வென்றும் தோன்றலாம். அப்படியல்ல. இது வரையிற் பகுத்தறியப்பட்ட அம்சங்கள் வேண்டியமட்டும் இது வரையிற் பகுத்தறியப்பட்டிருந்தாற் கிறித்தவர்களுக்குள் இவ்வளவு பிரிவுகள் ஏன் உண்டாயிருக்கும்.

IV. **என் சிற்றறிவுக்கு எட்டிய மட்டும் நான் சொல்லக் கூடியதாவது:**—இருவகை வம்புப்பேச்சுக்களாற் சமய நெறியிற் பிளப்பு உண்டாக

லாம். முதலாவது:—கட்சிப்படுவதில் ஏற்படும் எரிச்சலுக்கு ஈடுசெய்யாத அவ்வளவு சொற்ப சங்கதியைப் பற்றிப் பிளப்பு நேரிடலாம். பாதிரியர் ஒருவர் சொற்படி கிறித்துவின் மேலுடுப்பில் நூல் பிரிவு இருந்த தில்லையாயினும் கோயிலின் போர்வையில் பல வர்ணங்கள் இருந்தன. அதாவது ஒற்றுமைச் சங்கதி ஒன்றும், ஒழுக்க வொத்துமைச் சங்கதி வேறுமாக ஏற்படுகிறது. இரண்டாவது, பிரிவுக்குக்காரணமான அம்சம்பெருத்த சங்கதியாயிருப்பது நிஜமாயினும், கக்ஷிப்போராட்டத்தில் நுணுக்கி மறைபொருளாக்கித் தேறுதலில் அது வெற்றியுக்தி சாமார்த்தியமா யிருக்கிறதேயன்றிப் பொருண்மையற்ற சங்கதியாயிருக்கிறது. சிலசமயங்களில் அறிவிலிகள் சேர்ந்து ஒருமைப்படாது பிடிவாதமாய்க் கக்ஷியாட இவ்விருவரும் ஒன்றைக் கருதிப்பேசுவதும் அதனை உணராது அவ்விருவரும் சண்டைபோடுவதும் பக்கத்தில்நின்று கேட்டுக்கொண்டிருக்கும் அறிஞர்க்குத் தெரிவது சாதாரணமாம். மனிதர்க்குள்ளேயே இவ்வளவு ஏற்றத்தாழ்ச்சி ஏற்படின் நமது உள்ளத்தைத்திருத்தமாய் அறியும் இறைவனுக்கு அறிவின்மந்தமான மக்கள் ஒருவரோடொருவர் சச்சரவுப்பட்டுப் பிரியும் அம்சங்கள் வேறல்ல, ஒரேகருத்தையுடையன என ஏன் தோன்றுதோ? இறைவனுக்கு அவ்வம்சங்கள் எல்லாம் சரிப்பாடாய் ஒப்பாகலாமே. இப்படிப்பட்ட துர்க்கட்சி விஷயமாய் ஸேண்ட்பால் குரு உரைப்பதாவது. "பேச்சுக்களிற் கொடியபுதுமைகளையும் பொய்நூலறிவுப் போராட்டத்தையும் நீக்குங்கள்". பொய்விரோதங்களை மனிதர் கற்பனையால் உண்டாக்குவர். உண்டாக்கிக் கெட்டி மொழிகளால் உரைப்பர், கருதிய பொருளை மறந்து வெறு மொழிகளையே ஆதரித்துக் கட்சியாடுவர். சமயநெறியொற்றுமையில் இருவிதப் பொய் ஒற்றுமையுண்டு. அதாவது அறிவு எம்மட்டு மில்லாப் பொய் ஒற்றுமை ஒன்று, ஒளியின்றேல் ரங்கின் வேற்றுமைபுலப்பட வில்லையே, அறிவிலிகள் அவலம்பிக்கும் சமயநெறியிற் குற்றந்தோன்றுது, பிரிவு போராட்டமிராது, இவ்வொற்றுமை ஒப்பாகாதுபொய்யாம். சமயநெறியில் முக்கியமான கொள்கைகள் நேர்விரோதமாயிருக்க அவற்றை எப்படியோ சேர்த்துப் பொருத்திவைத்தாலும் பொய் ஒற்றுமைதான். ஏனென்றால் இச்சங்கதியில் மெய்பொய் என்னப்படுவன நெபுகட்நெஸரது உருவத்தின் கால் விரல்களில் அமைத்த களிமண்ணையும், இரும்புகளையும் ஒக்கும், ஒட்டிப் போகலாம், கலப்பதில்லை.

V. **சமயநெறி யொற்றுமை நிலைப்படுத்த உபாயமாவது:**—சமயநெறியொற்றுமை வேண்டி, அன்பின் வழிப்பட்ட முறைகள், மக்கள் இணங்கும் வழிப்பட்ட முறைகள், இவற்றிற்குக் கெடுதி நேரிடாமல் பார்க்கற்பாலதும் உளது, கிறித்தவர்க ளிடத்தில் உபதேசகத்தி எனவும் சீமையாளும் மன்னன் கத்தியெனவும் இருவகைக்கத்திகள் உள. சமயநெறியொற்றுமையை ஆதரிப்பதில் அவ்விரண்டு கத்திகளில் ஒவ்வொன்றும் எம்

மட்டும் வேலைக்கு உதவலாமோ அம்மட்டுக்கு மிஞ்சி உதவப்படுதல் தகாது. இவ்விரு கத்திகளுக்கும் வேறான மகமதின் கத்தியும் அதனையொத்த கத்தியும் மூன்றாவதாயுண்டு. அதனை நாம் ஆளுதல் தகாது. யுத்தங்களை நடத்திச் சமயநெறிகளை நிலைப்படுத்தலும், நடுக்கத்தாற் பிறர் உணர்ச்சியை நம் வசப்படுத்தப்பார்ப்பதுவும் தகா. வெளிப்படையான அவதூறு, வெளிப்படையாய்த் தெய்வமிகழ்தல், துரைத்தன விவகாரத்தை எண்ணிச் சமய நெறியில் வித்தியாசமாய் நடத்தல், இவற்றைக்கண்டிக்கும் பொருட்டுக் கத்தியை யொவாறு வழங்கலாம்போ லிருக்கிறது. அப்படியிருக்கத் துரைத்தனக் கட்டுப்பாட்டுக்கு விரோதம், ரகசியமான கலகங்கள், கலாபங்கள், இவை நடக்கும்படி கத்தியையெடுத்துக் கொடுத்து வழங்குதலும், குடிகளிடத்தில் ஆவேசமுண்டாக்கிக் கத்தியை வீசிக்கொண்டு புறப்பட்டுக் கடவுள் சம்மதப்பட்டிருக்கும் துரைத்தனம் தலைகிழாய் மாறும்படி வேலை செய்தல் எவ்வளவும் தகாது. ஏனென்றால் இவ்வாறான நடவடிக்கையாற் கடவுள் நியமனம் ஒன்றன் பொருட்டு மற்றொரு நியமனத்துக்கு விரோதஞ்செய்வதாம். கிறித்தவர்களாக மக்களை நோக்குவதை விசேஷமாயும், நம்மைப்போல மற்றையரும் மக்கள்தாமே யென்பதை மறந்தும் நடப்பது ஆம். தன்பெண்ணைப் பலியிட்டதைப் பார்த்துக்கூசாத அகமெம்நனைப்பார்த்து, லுகிரீஷஸ் கவி, "சமய ஆவேசத்தால் இவ்விபரீதம் நேரிட்டது" என முறையிட்டார். அவரே யின்னு மிருந்து பிரான்ஸில் பிராடஸ்டண்டுகளைக் கும்பலாய்ப் பலியிட்டதையும், இங்லண்டில் வெடிமருந்துச் சூதுக் குமுக்கு நடந்ததையும் பார்த்திருந்தாரானால் என்ன தான் முறையிட்டிராரோ! சிற்றின்ப அவாவும், நிரீசுவாதமும் எழுமடங்கு அதிகம் அவரிடத்தில் உண்டாய் இருக்கும். மன்னன் கத்தி வந்து சமய நெறியைக் காப்பாற்றுவதில் எப்படி உஷாராயிருக்க வேண்டியிருக்கிறதோ, அப்படியே குடிகளை ஏவிக் சத்திப்பிரயோகம் செய்ய விடுவது கொடும் பழியாம். அப்பேர்ப்பட்ட நடவடிக்கை ஞானஸ்நாக விரோதச் சமயத்தாரிடத்திலும், அவரைப் போன்ற கொலைபாதகரிடத்திலும் இருக்கிறபடி இருக்கட்டும். இறுமாப்பாற் "பரலோகத்துக் கேறி இறைவனாவேன்" என்ற சைதான மொழி தோஷமானால் நாம் நகரத்துக்கு இறங்கிச் சைதான சுவரூபம் இறைவன் அடைந்தார் என்னும் பழி ஏற்கும்படி நடந்து கொள்ளக் கூடாது. சமய நெறி நிலைப்படுங் கருத்தான் அரசாளுபவரைக் கொன்று ஜனங்களைச் சூறையாடித் துரைத்தனங்களைத் தலைகிழாக்குவது கடவுளுக்கு நரகச்சுவரூபம் உண்டாக்குவது தானே. இறைவனது ஞான வொளியை வர்ணிக்கையில், அது புறாவின் சொரூபம் எடுத்து வந்தது எனச் சொல்கிற வேதப்பிரமாண மொழியைத்தள்ளி, பருந்து கழுக்கள் சொரூபம் பெற்று இறங்கிற்று எனச் சொல்ல வேண்டியிருக்கும். கிறித்தவர் தர்ம ஒழுக்கத்தினர் என்றது நீங்கிக் கொள்ளை யடிப்பவர், கொலைபாதகர் எனச் சொல்லவுரியராவர்; ஆகையால்

உபதேசக் குருச்சபையார்தம் கொள்கையினாலும், ஆணையினாலும், மன்னவர் வேண்டுமானால் தம்சக்திப் பிரயோகத்தாலும், கிறித்தவச்சமயப் படிப்பு, மற்றநன்னெறிப்படிப்புப் படைத்த சிறந்தோர்தம் நற்போதனையினாலும், சமயநெறிப் பேச்சு எடுத்து வதைசெய்வார்களைக் கண்டிப்பார்களாக. நாம் ஆத்திரப்படுவதனால் இறைவன் காரியம் நடையுறுவதில்லை எனஸெண்ட்பால் செப்பிய மொழியைச் சமயநெறி போசனையில் எப்போதும் ஓதுக்கக் கடவேம். பிறரைச் சமயநெறிக்கொள்கையில் நம்முடைய வழிப்படுத்த வலிக்கட்டாயம்செய்தவர் காரியத்தை நெருங்கப்பார்க்கப் போனால் ஏதோ சொந்தத்துக்குப் பொருள்லாபம் அடையக் கோரி அவ்வாறு வலிக்கட்டாயம் செய்ததாக முடியுமென்ற பெரியவர்மொழிசரிதான்; அவர் நிஜத்தையுரைத்தவரே.

## தமிழாக்கியோர் குறிப்பு.

தென் இந்தியாவில் முக்கியமாய் வழங்கும் சமயம் இந்து சமயம். இச்சமயத்தில் நீறிடுவார், நாமமிடுவார் என இரண்டு பெருத்த பிரிவுகள் உண்டு. நீறிடுவார் கோயிலிற் பிரிவுச்சண்டை அவ்வளவாய்க்காணோம். நாமத்தினரில் வடகலை, தென்கலைச்சண்டை விபரீதமாயுளது, வெகுகாலமாய்ச் சண்டைபோட்டு, ஒரு பிரிவினர் மேல் மற்ற பிரிவினர்க்கு எப்படியாவது கழுத்தையறுத்தாலும் ஆறுதெனும் பகைக்கொதிப்பெடுத்து நிற்கிறது. ஏகாதசியிற் பிதிர்த்தெவசம் இட்டால் என்ன, அவர்க்குத்தோன்றிய நியாயத்தின் பொருட்டு, மறுதினம் அதையிட்டால் என்ன எந்தப்பாத்திர மந்திரம் சொன்னால் என்ன, விட்டாலென்ன, வடமொழி வேதம் ஓதினால் என்ன, தென்மொழி வேதம் ஓதினால் என்ன, கடவுளுக்கு இருமொழியும் சரியாய் ஒப்புத்தானே. சமயநெறியிற் பல ஒழுக்கங்கள் இருக்கலாம். இதற்காக யாரையும் பகைப்பது அக்கிரம நடத்தையாயிற்றே ஆதியில் ஸ்ரீ சங்கரர் கொள்கைகளை ஒழுங்குபடுத்தினரே யன்றி, ஒழுக்கங்கள் எப்படியாவது இருந்து போகட்டும் எனவில்லையா? கெட்டியாய் அக்கிரமவொழுக்கங்கள், தாமே நாளடைவில் ஒழியும்.

சமயநெறியில் வேறுபட்டாரைப் பகைப்பவர்போல் துஷ்டர்கள் இல்லை. ஒரு குலத்திலோ, கோயிலிலோ ஏதோ ஓர் ஒழுக்கம் நடைபெற்றுவர, நமது ஒழுக்கம் அக்குலத்திலும் அக்கோயிலிலும் நிறைவேறவேண்டும் எனப் பிடிவாதம் செய்வது, தெய்வத்துக்குச் சம்மதமா?

திருநெல்வேலியிற் சாணார்கள்பேரில் மறவர் அவ்வளவு பகை பாராட்டுவானேன்?

சமயநெறியில் வேறுபட்டவர்பேரிற் பகைபாராட்டுகிறவரையில் இந்தியர் க்ஷேமப்படமாட்டார்கள். ஐரோப்பாவிற் சமயநெறியிற் பிளப்பு உண்டு, பிளவுபட்டார் ஒருவரையொருவர் பகைத்து விவகாரங்களில் அக்

கிரமங்களுக்குப்போவதில்லை. தம்தம் சமயம் வலுக்கக்கோரி அக்கிரமத்திற் புத்தி சொல்லுவார் பேசுனாது சிற்றுளையை வாசித்துச்சிந்திப்பாராக.

டி. ஆர். இராமநாத ஐயர்.

---

## சமாசாரங்கள்.

---

இந்தியாவிற் பள்ளிப்பிள்ளைகள் செய்யும் புரட்டைப்போன்று ஸ்காட்லாண்டில் முக்கிய நகரமாகிய அபர்டீனில் ஒரு சோதகர் செய்ததாக ஆங்கிலேயப் பத்திரிகைகளில் வாசித்தனம். ஒரு பாடத்திற்குச் சோதகர் வேண்டுமென்று விளம்பரஞ் செய்ததாயும், அப்பாடத்திற் பிரசித்திபெற்ற ஜேம்ஸ கிராண்டு எனும் நிபுணன் பேர்கொண்ட மற்றொருவன் அப்ளிக்கேஷன் செய்து சோதகனாய் நியமிக்கப்பட்டானென்றும், பரீட்சை நடந்த பின்னர் அவன் திருத்திய ஆன்ஸர் பேப்பர்களைப் பார்க்கும் பொழுது அவன் போலி மனிதனென்றுகண்டு பிடிக்கப்பட்டானென்றும்பேர் மாறாட்டஞ்செய்ததற்காக ஆறுமாதம் தண்டனை விதிக்கப்பெற்றானென்றும், ஹிந்துவில் வெளியிடப்பட்டிருக்கின்றது. வெட்கம். வெட்கம்.

***

பதினெண் புராணங்களில் ஒன்றாகிய மச்சபுராணம் இதுவரை அச்சிடப்படாமல் இப்பொழுது தாம்ஸன் கம்பெனியார் அச்சிட்டு வருகின்றனர். அருமையான புராணமாதலால் திருமயிலை வித்வான் ம-ா-ா-ஸ்ரீ சண்முகம் பிள்ளையவர்கள் சிரத்தையுடன் பிழை நேரிடாமற் பார்த்து வருகின்றார்கள். இந்தப்புராணத்தை ஆக்கியோர் வடமலையப்பர் என்பார். இவர் திருநெல்வேலியில் நாலைந்து தலைமுறைக்குமுன் கீர்த்திபெற்ற "பிள்ளையன்" குடும்பத்தின் தலைவர். இவர் வழியிற்றோன்றிய சுப்பிரமணிய பிள்ளையன் பி. ஏ. அவர்களனுமதியின் பேரில் அவர் வீட்டிலுள்ள மூலப்பிரதியுடன் ஒத்துப்பார்த்து இப்புராணம் அச்சிடப்பட்டு வருகின்றது. இதில் 5000 பாட்டுக்களுள. இப்புத்தகம் செப்டெம்பர்மீ 15உ வெளிவரும். இதன் உத்தேச விலை ரூ 2—8—0. இப்புத்தகம் வேண்டியவர்கள் சென்னை ப்ராட்வே, தாம்ஸன் கம்பெனியாருக்கு எழுதி வரவழைத்துக்கொள்ளலாம்.

***

சிவஸ்தலங்களிலொன்றாகிய திருமுல்லைவாயிலுக்கு நாளதுவரை புராணம் எழுதப்படாமல் தலமான்மியம் அனேகருக்குத் தெரிந்திலது. அக்குறையை நீக்கும்பொருட்டுத் திருமயிலைவித்வான் ம-ா-ாஸ்ரீ சண்முகம் பிள்ளையவர்கள் ஒரு புராணம்பாடித் தாம்ஸன்கம்பெனியில் அச்சிட்டுவருகின்றனர். கூடியசீக்கிரத்தில் வெளிவரும்.

சென்னை ஐக்கோர்ட்டு முதல் ஜட்ஜிவேலைக்குச் சென்னையில் அட்வோ கேட்டு வேலைபார்த்துவந்த ஆர்னல்டு ஒயிட்டு துரையவர்கள் நியமனஞ் செய்யப்பட்டனர். அவர் சீமையிலிருந்து சென்னைக்குவந்து கொஞ்சக்கால மானபோதிலும் அவர் நிரம்பவும் சுகுணர், ஆழ்ந்தயோசனையுடையவர், சரியான நீதிசெலுத்தத் தக்கவர், என்றபேச்சு எங்கும் நடமாடுகின்றது.

* * *

பாரிஸ்டர் பரீட்சை கொடுத்தவர்களையன்றி மற்றோரை முதல் ஜட்ஜி வேலைக்கு நியமித்தல் கூடாதென்ற வழக்கத்தைபற்றி பார்லிமெண்டு சபையிற் கேள்விகள் கேட்கப்பட்டன. அவற்றிற்குத்தக்க விடை கொடுக் கப்பட்டதாய்த் தெரியவில்லை.

* * *

இத்தருணம் மேற்கூறியநிபந்தனை எடுபடுமாயின் முதல் ஜட்ஜிவேலை இப்பொழுது ஷை வேலையைப்பார்த்துவரும் திவான்பகதூர் ம-ா-ா-ஸ்ரீ, சுப்பிரமணிய ஐயரவர்களுக்கே ஆகுமென்பதற்கு ஐயமில்லை.

* * *

சென்னை முன்ஸிப்பாலிடியார் லாயர் நார்ட்டன் துரையவர்களைச் சட்ட நிருபணசபைக்கு மெம்பராகத் தெரிந்தெடுத்தமையாற் பொதுஜனவிஷ யங்களைப் பயப்படாமற் சட்டநிருபண சபையில் எடுத்துப்பேசத்தகுந்தவ ரென்று எல்லோரும் சந்தோஷப்படுகின்றனர்.

* * *

சென்னைச் சர்வகலாசாலையின் ஒரு பகுதியை திராவிட பாஷாவிருத்திக் காகவேற்படுத்தவேண்டி, ஆராய்ந்து அபிப்பிராயத்தை வெளிப்படுத்தும்படி ஏற்படுத்திய கமிட்டியார், அது முடியாதென்றும், திராவிட பாஷைகளில் தனியே பரீட்சைகள் நடத்தித் தேறினவர்களுக்குப் பட்டஞ்சூட்டுதல் கூ டாமை யென்றும் ரிப்போர்ட்டு செய்யப் போகிறார்கள்.

* * *

முக்கிய சோதனைக்காரர் எந்தக் கல்லூரியிலாகினும் எந்தப் பாடத்திற் சோதனை செய்யும்படி திட்டப்படுத்தப்படுகிறாரோ அந்தப் பாடத்தைப் பரீட்சைக்குமுன் இரண்டு வருடத்திற்குக் கற்பிக்கக் கூடாதென்று எம். ஏ. பிரமஸ்ரீ என். வைத்திய நாத ஐயரவர்கள் சர்வகலாசாலையின் அடுத்த சினேட்டு மீட்டிங்கில் பேசப்போகிறார். அங்ஙனஞ் செய்தல் பொது வாய் நன்மை பயக்கத் தக்கதாயினும் நிறைவேறுதல் துர்லபம். தவிரவும் பி. ஏ. பரீட்சை சோதகர் பி. ஏ., பரீட்சையில் தேறினவர்களாயும், எம். ஏ. பரீட்சாசோதகர் எம். ஏக்களாயும் இருக்கவேண்டு மென்றும் வற்புறுத்தப் போகின்றார். இதுவும் துர்லபமே. ஏனெனில் சர்வகலாசாலையிற் பட்டம் பெறாதவர்கள் சோதனை செய்யத் தகுந்தவர்களாய் அனேகர் இருக்கலாம். ஆங்கிலேய தேசத்தில் மிகவும் கீர்த்திபெற்றவர்களி லனேகர் சர்வகலா சாலைகளிலொதுங்காதவரும் அவற்றிற் பட்டம் பெறாதவர்களுமே.